# گناہ سے کیسے بچیں؟ (ٹمل)

# பாவத்தை விட்டு பாதுகாத்து கொள்வது எப்படி?

اِلٰهِىْ عَبْدُكَ الْعَاصِىْ اَتَاكَ

مُقِرًّا بِالذُّنُوْبِ وَقَدْ دَعَاكَ

فَاِنْ تَغْفِرْ فَاَنْتَ لِذَاكَ اَهْلُ

فَاِنْ تَطْرُدْ فَمَنْ يَّرْحَمُ سِوَاكَ


حضرت مولانا پیر ذوالفقار احمد نقشبندی، مجددی
دامت برکاتہم

ஹள்ரத் மௌலானா பீர்
**துல்ஃபிகார் அஹ்மது ஸாஹிப்**
நக்ஷ்பந்தீ, முஜத்திதீ, தாமத் பரகாதுஹும்



# گناہ سے کیسے بچیں؟ (تمل)

# பாவத்தை விட்டு பாதுகாத்து கொள்வது எப்படி?

**யா அல்லாஹ்! பாவியான உன் அடியான் உன் சன்னிதானத்தில் வந்துவிட்டான்.**
**பாவங்களை ஒப்புக்கொண்டவனாக வந்துவிட்டான்.**
**இன்னும் உன்னிடம் வேண்டிகேட்டுக்கொள்கிறேன்.**
**நீ மன்னித்துவிட்டால் அதற்கு நீயே மிக தகுதியானவன்.**
**நீ கைவிட்டால் உன்னை தவிர என் மீது இரக்கப்படுபவர் யார்!**


حضرت مولانا پیر ذوالفقار احمد نقشبندی، مجددی
دامت برکاتہم

ஹள்ரத் மௌலானா பீர்
**துல்ஃபிகார் அஹ்மது ஸாஹிப்**
நக்ஷ்பந்தீ, முஜத்திதீ, தாமத் பரகாதுஹும்



வெளியீடு :
மௌலானா ஷகீல் அஹ்மது நக்ஷ்பந்தி
செல் : 94444 53232

நூல் கிடைக்க : 9940137781

## பொருளடக்கம்



بِسۡمِ اللهِ الرَّحۡمٰنِ الرَّحِيۡمِ

## மதிப்புரை

அல்லாஹ்வின் கிருபையால், சர்வதேச அளவில் மாபெரும் சீர்திருத்தப் பணி செய்து வரும் பெரியார்களில் ஹள்ரத் மௌலானா பீர் துல்ஃபிகார் அஹ்மது ஸாஹிப் தாமத் பரகாதுஹும் அவர்கள் குறிப்பிட்டுச் சொல்லப்பட வேண்டியவர்கள். பாவத்தின் காரணத்தினால் துன்பத்தில் துவண்ட மனிதர்கள், ஹள்ரத் அவர்களின் சொற்பொழிவின் மூலம் தனக்குள் சீர்திருத்தத்தை ஏற்படுத்தி இன்பமான, பரிசுத்தமான வாழ்க்கையை மேற்கொண்டவர்கள் ஏராளம். பொதுமக்கள் மட்டுமின்றி உலமாக்கள் மற்றும் ஸாலிஹீன்கள் என அனைத்துத் தரப்பினரும் ஹள்ரத் அவர்கள் மூலம் பயனடைந்துள்ளனர். பாவத்தை விட்டு தன்னை எப்படி பாதுகாத்து கொள்வது என்ற தலைப்பில் ஹள்ரத் அவர்கள் ஆற்றிய அற்புதமான சொற்பொழிவை மௌலானா சைய்யிது முஹம்மது பாஷா ரஷாதி, காஸிமி ஹள்ரத் அவர்கள் மிக அழகிய முறையில் தமிழாக்கம் செய்துள்ளார்கள். அல்லாஹ் இதனை ஏற்றுக் கொள்வானாக! ஆமீன்.

அன்புடன்

மௌலானா ஷகீல் அஹ்மது நக்ஷ்பந்தி, பெங்களூரி.

# மொழிபெயர்ப்பாளன் உரை

الحمد لله وكفى وسلام على عباده الذين اصطفى

அல்லாஹுதஆலா முழு மனித சமுதாயத்தின் ஈருலக வெற்றியை தனது தீனின் படி வாழ்வதில் வைத்துள்ளான். தீன் என்பது இரண்டு விஷயங்களை உள்ளடக்கிய ஒரு இறையியல் கோட்பாடாகும். ஒன்று; ஏவல்கள். மற்றொன்று விலக்கல்கள். இவ்விரண்டையும் அல்லாஹ் தன் திருமறையில் தெளிவுப்படுத்தியிருப்பதோடு நபி ﷺ அவர்களும் விளக்கிக் கூறியுள்ளார்கள்.

எந்த முஃமின், அவனது ஏவல்களை எடுத்து நடந்து விலக்கல்களை விட்டு விலகி, பேணிக்கையாக நடப்பாரோ, நிச்சயமாக அவரது வாழ்க்கை மகிழ்ச்சியான வாழ்க்கையாக அமையும். இங்கொரு முக்கியமான விஷயத்தை நமது பெரியார்கள் குறிப்பிடுகிறார்கள். அதாவது ஏவல்களில் பர்ளு மற்றும் வாஜிப் எனும் கட்டாயமாக செய்ய வேண்டிய கடமைகளுக்குப் பின்னர் நஃபில்கள் எனும் உபரியான வணக்கங்களில் ஈடுபடுவது சிறந்ததா? அல்லது அல்லாஹ்வும் அவனது தூதரும் தடுத்த ஹராமான பாவங்களை விட்டு விலகியிருப்பது சிறந்ததா? என்ற வினாவிற்கு "பாவங்களை விட்டு விலகியிருப்பதுதான் சிறந்தது" என்கிறார்கள். காரணமென்னவெனில் "பாவம்" என்பது அல்லாஹ்விற்கு மாறு செய்வதாகும். அதனால் உள்ளம் கருமையடைந்து விடுகிறது. அது மட்டுமின்றி பாவங்களை விட்டு விலகாமல் நன்மையான காரியங்களை மட்டும் செய்து கொண்டே செல்வோமேயானால், அப்பாவங்கள் நன்மைகளின் ஒளியையும் சக்தியையும் அழித்து விடுகின்றன. எனவே தான் அல்லாஹுதஆலா தனது திருமறையில்

وَذَرُوا ظَاهِرَ الْإِثْمِ وَبَاطِنَهُ

(முஃமின்களே!) பாவத்தில் வெளிப்படையானதையும், அதில்



அந்தரங்கமானதையும் நீங்கள் விட்டு விடுங்கள். (அல்குர்ஆன் 6:120) என்று கூறியுள்ளான்.

மேலும் அண்ணல் நபி ﷺ அவர்கள்கூறினார்கள்:

اتق المحارم تكن أعبد الناس

பாவங்களை விட்டு உன்னை நீ பாதுகாத்துக் கொள், நீ மக்களில் மிகப் பெரிய வணக்கசாலியாக ஆகி விடுவாய். அதாவது "பாவங்களை விடுவது தான் சிறந்த வணக்கம்" எனும் அதியற்புத தத்துவத்தை கூறிக்காட்டுகின்றார்கள்.

இன்றைய காலத்தில் முஸ்லிம்கள் நன்மைகளை பெற்றுத் தரும் செயல்களில் பெரிதும் ஆர்வம் காட்டுகின்றார்கள். அதே நேரத்தில் பாவங்களிலும் ஈடுபட்டு வருகின்றார்கள். இதன் காரணமாக, அவர்கள் செய்த நற்செயல்களின் பலன்களை விட்டு அவர்கள் தூரமாகுவதோடு, இஸ்லாம் மற்றும் முஸ்லிம்களின் நற்பெயருக்கு இழுக்கு ஏற்பட காரணமாகி விடுகின்றார்கள். இன்று உலகம் முழுவதிலும் முஸ்லிம்களின் சீரழிவிற்கு முக்கிய காரணம், பாவங்களிலிருந்து முழுமையாக விலகாமல் நன்மைகளை செய்து வந்தால் மட்டும் போதுமானது எனும் ஷைத்தானின் சூழ்ச்சியின் வலையில் சிக்குண்டு ஆத்மீக சக்தியின்றி வாழ்ந்து வருவதாகும்.

சற்று சிந்தித்துப் பார்த்தால் நூற்றுக்கு தொண்ணூற்றொன்பது சதவீத முஸ்லிம்கள் ஏதேனுமொரு பாவத்தில் சிக்குண்டு அதனை விட்டு தப்பித்துக் கொள்வதற்கான திசை தெரியாமல் வாழ்ந்து வருகிறார்கள். அவர்களில் சிலர், "எவ்வளவு முயன்றும் அப்பாவங்கள் எங்களை விட்டு அகலுவதில்லை. எனவே, நாங்கள் என்ன செய்வது?" என்று கூறுகின்றனர். வேறு சிலர், "இன்றைய கால சூழ்நிலையில் பாவங்களை விட்டு தப்பித்துக் கொள்வது பார தூரமான விஷயமாகிவிட்டது. எனவே, அதனை விட்டு விலகியிருப்பது சாத்தியமில்லாத காரியம்" என்று

கூறுகிறார்கள். இன்னும் சிலர், "நாம் தான் பல நன்மைகளை செய்து வருகின்றோமே! ஒரு சில பாவங்கள் நமது வாழ்வில் நிகழ்ந்து விட்டாலும், நன்மைகளின் காரணமாக அவை மன்னிக்கப்பட்டு விடும்'' என்று நிம்மதியடைந்து கொள்கின்றனர். ஆனால், பாவங்களிலிருந்து விடுதலை பெறுவதற்கு என்ன வழி? என்று தேடியலைகின்றவர்களும் இருக்கின்றார்கள்.

இப்படிப்பட்டவர்களுக்கு கிடைத்த மாபெரும் பொக்கிஷம், "பாவத்தை விட்டு பாதுகாத்துக் கொள்வது எப்படி? என்ற இந்நூலாகும். இதனை படிப்பவர்கள் உள்ளம் உருகி கண் கலங்கி தனக்குள் ஒரு மாற்றத்தை இன்ஷா அல்லாஹ் ஏற்படுத்தாமல் இருக்க முடியாது. ஏனெனில் குர்ஆன், ஹதீஸ் மற்றும் பெரியார்களின் அறிவுரைகளை மேற்கோள் காட்டி, பாமர மக்களும் புரிந்து கொள்ளும் விதத்தில் ஹள்ரத் மௌலானா பீர் துல்ஃபிகார் அஹ்மது ஸாஹிப் நக்ஷ்பந்தீ, முஜத்திதீ தாமத் பரகாதுஹூம் அவர்கள் ஆற்றிய உள்ளங்களை தட்டி எழுப்பும் சீரிய உரையே இந்நூலாகும். ஹள்ரத் அவர்கள் உலகிலுள்ள சுமார் நாற்பத்தைந்து நாடுகளுக்கு சீர்திருத்தப் பயணம் செய்து ஆத்மீகத்தை வளப்படுத்தும் ஆயிரக்கணக்கான சிறப்புரைகளை நிகழ்த்தியுள்ளார்கள். பாவத்தின் காரணத்தினால் துன்பத்தில் துவண்ட மனிதர்கள் ஹள்ரத் அவர்களின் சொற்பொழிவின் மூலம் தனக்குள் திருத்தத்தை ஏற்படுத்தி இன்பகரமான பரிசுத்தமான வாழ்க்கையை மேற்கொண்ட ஏராளமானவர்கள் உலகம் முழுவதும் இருக்கிறார்கள், பொது மக்கள் மட்டுமின்றி உலமாக்கள் மற்றும் ஸாலிஹீன்கள் என அனைத்துத் தரப்பினரும் ஹள்ரத் அவர்களின் மூலம் பயனடைந்து பாவங்களை விட்டு விலகி வாழ துவங்கிவிட்டனர். மேற்கத்திய கலாச்சாரத் தாக்கம் அதிகமாகிவிட்ட இந்த சூழலில் ஹள்ரத் அவர்களின் ஆன்மீக வழிகாட்டுதல் மிகவும் இன்றியமையாதது. ஹள்ரத் அவர்கள் உருதுவில் ஆற்றிய ஐநூறுக்கும் மேற்பட்ட அற்புதமான



சொற்பொழிவுகள் கோர்வை செய்யப்பட்டு, "குத்பாதே துல்ஃபிகார்", "தவாயேதில்", "சுகூனேதில்" போன்ற பல பெயர்களில் வெளிவந்து விட்டன. இன்னும் வெளிவந்துக் கொண்டே இருக்கின்றன. அண்மையில் (ஏப்ரல் 2011)ல் இந்தியாவிற்கு வருகை தந்த ஹள்ரத் அவர்களின் மூலம், தாருல் உலூம் தேவ்பந்த் (உ.பி), குஜராத் என வட இந்தியாவிலிருந்து பெங்களூர் (கர்நாடகா), ஹைதராபாத் (ஆந்திரா), மும்பை (மஹாராஷ்டிரா), மேல் விஷாரம் (தமிழ்நாடு) என தென்னிந்தியா வரை இலட்சக் கணக்கானோர் பயனடைந்தனர். இந்த இந்திய பயணத்தில் ஹள்ரத் அவர்கள் ஆற்றிய சொற்பொழிவுகள் "குத்பாதே ஹிந்த்" என்ற பெயரில் இரண்டு பாகத்தில் வெளி வந்துவிட்டன.

இம்மஹானைப் பற்றி அடியானுக்கு முதன் முதலில் அறிமுகப்படுத்தியவா், ஹள்ரத மௌலானா முஃப்தி ஷகீல் அஹ்மது நக்ஷ்பந்தீ, பெங்களூரி ஆவார்கள். இவர்கள், ஹள்ரத் அவர்களின் தென்னிந்தியா - தமிழ் நாட்டின் "முதல் கலீஃபா" ஆவார்கள். அடியான் இருபது ஆண்டுகளாக அரபு நாடு-அபூதாபியில் வாழ்ந்து வருவதால், பீர் ஸாஹிப் அவர்கள் அரபகத்திற்கு வருகை தரும் காலத்தையும், இடத்தையும் காட்டிக்கொடுத்து ஹள்ரத் அவர்களின் திருச் சபைகளில் பங்கெடுக்க வைத்து அடியானின் வாழ்வில் மறுமலர்ச்சியை ஏற்படுத்தினார்கள். இவர்கள் அடியானின் மீது அல்லாஹ்விற்காக வைத்துள்ள அன்பிற்கு அளவில்லை. எங்களிருவரின் நட்பு 1980 ஆம் ஆண்டு அடியான் தாருல் உலூம் ஸபீலுர் ரஷாத், பெங்களூர் அரபிக் கல்லூரியில் பயிலும் போது ஏற்பட்டது.

ஹள்ரத் பீர் ஸாஹிப் அவர்களின் திருச்சபையில் பிரசன்னமாகி ஹள்ரத் அவர்களை நேரடியாக பார்த்தேன். உபதேசத்தை கேட்டேன். இறுகியிருந்த என் இதயம் இலகியது. எனக்குள் ஏற்பட்ட மாற்றங்களையும், உணர்வுகளையும் கூற

என்னிடம் வார்த்தைகளில்லை. நேரடியாகச் சென்று பார்த்தவர்கள் அதை நன்குணர்வார்கள். பிறகு நான் ஹள்ரத் அவர்களின் சொற்பொழிவு புத்தகங்களை தினந்தோறும் படிக்க ஆரம்பித்து விட்டேன். அத்துடன் ஹள்ரத் அவர்களின் இணையதளமான "www.tasawwuf.org" மூலமும், ஒலி நாடாக்கள் மூலமும் கேட்பதும் வழக்கம். ஹள்ரத் அவர்களின் பயானை கேட்பதின் மூலம் பாவங்களை விட்டு விலகும் உறுதியும் நன்மையான காரியங்களில் உத்வேகமும் ஏற்படுவதை நன்கறியலாம். தமிழ் பேசும் மக்களும் ஹள்ரத் அவர்களின் பயான்களின் மூலம் பயனடைய வேண்டும் என்ற ஆசை அடியானுக்கு ஏற்பட்டது. அந்த நேரத்தில் தான் ஹள்ரத் அவர்களின் "குனாஹோஸே கைசே பசே" எனும் உருது நூலை எந்த தகுதியுமற்ற இவ்வடியானிடம், முஃப்தீ ஷகீல் அஹ்மது ஹள்ரத் அவர்கள் வழங்கி, தமிழாக்கம் செய்யும் படி பணித்தது மட்டுமின்றி ஆர்வமூட்டி உற்சாகப் படுத்தினார்கள் என்பதை கூறிக் கொள்வதில் பெருமிதமடைகிறேன். அல்லாஹ் அவர்களுக்கு மேலான நற்கூலியை வழங்குவானாக! ஆமீன்.

எளியவனின் இச்சிறு முயற்சியை அல்லாஹுதஆலா ஏற்றுக் கொண்டு, இதன் மூலம் பாவக்கறைகளைப் போக்கி பரவலான பலனை அனைவர்களும் அடைய தவ்ஃபீக் செய்வானாக! ஆமீன்.

இஸ்லாமிய ஊழியன்

**செய்யது முஹம்மது பாஷா, ரஷாதி, காஸிமி**

11, ஷஃபான் - 1432, 12-07-2011

அபூதாபி-U.A.E







## பாவங்களை விட்டுவிடுங்கள்!

اَلْحَمْدُ لِلّٰهِ وَكَفٰى وَسَلَامٌ عَلٰى عِبَادِهِ الَّذِيْنَ اصْطَفٰى, اَمَّا بَعْدُ !

فَاَعُوْذُ بِاللّٰهِ مِنَ الشَّيْطَانِ الرَّجِيْمِ. بِسْمِ اللّٰهِ الرَّحْمٰنِ الرَّحِيْمِ

وَذَرُوْا ظَاهِرَ الْاِثْمِ وَبَاطِنَهٗ (ஸூரத்துல் அன்ஆம் : 6 : 120)

وَقَالَ اللّٰهُ تَعَالٰى فِيْ مَقَامٍ اٰخَرَ : اِنَّ اللّٰهَ يُحِبُّ التَّوَّابِيْنَ وَيُحِبُّ الْمُتَطَهِّرِيْنَ

(அல்பகரா : 2 : 222)

سُبْحَانَ رَبِّكَ رَبِّ الْعِزَّةِ عَمَّا يَصِفُوْنَ وَسَلَامٌ عَلَى الْمُرْسَلِيْنَ وَالْحَمْدُ لِلّٰهِ رَبِّ الْعَالَمِيْنَ.

اَللّٰهُمَّ صَلِّ عَلٰى سَيِّدِنَا مُحَمَّدٍ وَّعَلٰى اٰلِ سَيِّدِنَا مُحَمَّدٍ وَّبَارِكْ وَسَلِّمْ

اَللّٰهُمَّ صَلِّ عَلٰى سَيِّدِنَا مُحَمَّدٍ وَّعَلٰى اٰلِ سَيِّدِنَا مُحَمَّدٍ وَّبَارِكْ وَسَلِّمْ

اَللّٰهُمَّ صَلِّ عَلٰى سَيِّدِنَا مُحَمَّدٍ وَّعَلٰى اٰلِ سَيِّدِنَا مُحَمَّدٍ وَّبَارِكْ وَسَلِّمْ

அல்லாஹு தஆலா கூறுகின்றான்:

وَذَرُوْا ظَاهِرَ الْاِثْمِ وَبَاطِنَهٗ

(முஃமின்களே!) பாவத்தில் வெளிப்படையானதையும், அதில் அந்தரங்கமானதையும் நீங்கள் விட்டு விடுங்கள்.

(அல் -குர்ஆன் 6 : 121)

அல்லாஹு தஆலாவின் கட்டளையை மீறுவதையும், நபி ﷺ அவர்களின் சுன்னத்தான வழிமுறைக்கு மாறு செய்வதையும் பாவம் எனக் கூறப்படும். எனவே, நாம்

வெளிப்படையாக அல்லது அந்தரங்கமாக செய்கின்ற அனைத்து பாவங்களையும் விட்டு விலகிக் கொள்ளுமாறு நமக்கு கட்டளையிடப்பட்டுள்ளது.

**பாவத்திற்கு உதாரணம்**

1) பாவத்தை புற்றுநோயினால் ஏற்படும் புண்ணிற்கு ஒப்பிடலாம். உடலில் ஏதேனும் ஒரு உறுப்பில் புற்றுநோய் தொற்றிக் கொண்டால், அதற்கு டாக்டர்கள் கூறும் ஒரே வைத்தியம் அறுவை சிகிச்சை மூலம் அவ்வுறுப்பை வெட்டி எடுத்து விடுவதாகும். வெட்டி எடுக்காவிட்டால், அக்காயம் பெரிதாக வளர்ந்து மனிதன் மரணமடைய காரணமாகி விடும். இதேப் போன்று பாவத்திற்கு ஒரே வைத்தியம், அதனை அடியோடு விட்டு நீங்கிக் கொள்வதாகும். மனிதன் பாவத்தை விடாமல் தொடர்ந்து செய்து கொண்டே இருந்தால், அப்பாவத்தின் பழக்கம் மேலோங்கி மனிதனுக்கு ஆத்மீக மரணம் சம்பவிப்பதற்கு காரணமாகிவிடும்.

2) பாவம், நெருப்புக் கங்கைப் போன்றதாகும். நெருப்புக் கங்கு பிரகாசமாகவும், மினுமினுப்பாகவும் இருந்தும் கூட கங்கென்ன? சிறு தீப்பொறியை கூட அறிவுள்ள எந்த மனிதனும் தொடுவதில்லை. காரணம், தொட்டால் சுடும். வலிக்கும் இதேப் போன்றுதான் பாவங்கள் பெரியதாக இருந்தாலும், சிறியதாக இருந்தாலும் மனிதனுக்கு நஷ்டத்தையே விளைவிக்கின்றன.

3) பாவம், தேளைப் போன்றதாகும், நாம் பெரிய தேளை பார்த்தாலும் சிறிய தேளை பார்த்தாலும் விரண்டோடி விடுகிறோம். ஏனெனில், சிறிய தேளாக இருந்தாலும் அது கடித்து விட்டால் நஷ்டமே விளையும். இதேப் போனறு பாவம் சிறிதாக இருந்தாலும் அதன் விளைவு மோசமானதாகும். எனவே, முடிந்த அளவிற்கு பாவத்தை விட்டு நாம், நம்மை தற்காத்துக் கொள்ள முயற்சிக்க வேண்டும்.





**பெரும் வணக்க சாலி யார்?**

ஒருவர் அண்ணல் நபி ﷺ அவர்களின் சமூகத்திற்கு வருகை தந்து, அல்லாஹ்வின் தூதரே! நான் மிகப்பெரும் வணக்கசாலியாக விரும்புகிறேன். அதற்கு நான் என்ன செய்ய வேண்டுமென அழகானதொரு வினாவிடுத்தார். அதற்கு அண்ணல் நபி ﷺ அவர்கள்,

اِتَّقِ الْمَحَارِمَ تَكُنْ اَعْبَدَ النَّاسِ

''பாவங்களை விட்டு தன்னை பாதுகாத்துக் கொள்ளும்! மக்கள் அனைவரையும் விட மிகப் பெரிய வணக்க சாலியாக நீர் ஆகி விடுவீர்'' என பதிலளித்தார்கள்.

எனவே, ஒரு மனிதா் தனது கண், காது, நாவு மற்றும் மா்மஸ்தானம் உட்பட ஆறடி உடம்பின் எந்த உறுப்பிலிருந்தும் பாவம் நிகழாமல் பாதுகாத்து அல்லாஹுதஆலாவின் கட்டளைக்கும், நபி ﷺ அவர்களின் சுன்னத்தான வழிமுறைக்கும் மாறு செய்யாமல் பார்த்துக் கொண்டால் அவா் நீள நீளமாக நஃபில்கள் தொழாவிட்டாலும், இரவு நேரங்களில் வணக்கத்தில் ஈடுபட்டு, நீண்ட நேரம் தியானத்தில் இருக்காவிட்டாலும், இவா் விலாயத் எனும் இறைநேசத்தின் அசலை மிக விரைவில் அடைந்து கொள்வார். ஏனெனில், இவா் பாவங்களை விட்டு விலகி வாழ்ந்து வருகிறாா்.

**இறைநேசர்களின் சிறப்பம்சம்**

பாவங்களை விட்டு விலகி வாழ்வது இறைநேசர்களின் தனிப் பெரும் சிறப்பாகும். மற்ற மனிதர்கள் சில சமயம் மிகப் பெரிய நற்செயலை செய்கிறார்கள். அதன் மூலம் அவர்களின் உள்ளம் ஒளிமயமாகிவிட்டாலும், பாவத்திலும் ஈடுபட்டு விடுகிறார்கள். பார்க்கக்கூடாததை பார்த்து விடுகிறார்கள். கேட்கக்

கூடாததை கேட்டுவிடுகிறார்கள் பேசக்கூடாததை பேசிவிடுகிறார்கள். மற்றவர் மனதை புண்படுத்தி விடுகிறார்கள். இதனால், அவர்களின் நற்செயலால் இதயத்தில் ஏற்பட்ட ஒளி மங்கி இருண்டுவிடுகிறது.

**உணர்வூட்டும் உதாரணம்**

நீர் தொட்டியை நிரப்ப குழாயை திறந்து விட்டீர்கள். ஆனால், அதே நேரத்தில் தொட்டியின் கீழுள்ள வால்வை திறந்தே வைத்து விட்டீர்கள் என்றால், நீர் தொட்டி ஒரு போதும் நிரம்பாது. மாறாக அந்த வால்வை அடைத்துவிட்டால், குழாயிலிருந்து நீர் சொட்டு சொட்டாக வந்தாலும் கூட இன்றே இல்லாவிட்டாலும் என்றாவது ஒரு நாள் அந்த நீர் தொட்டி நிரம்பிவிடும்.

இது தான் நமக்கும் இறைநேசர்களுக்கும் மத்தியிலுள்ள வேறுபாடு. நாம் நன்மைகள் பல செய்தாலும், பாவமும் செய்து விடுகிறோம். இதனால் நன்மையின் மூலம் ஏற்பட்ட பலன்களையும், பிரகாசங்களையும் பறிகொடுத்து விடுகிறோம். சில சமயம், ஆன்மீக ஆசானான ஷைகு அவர்களின் அவைக்கோ அல்லது தீனுடைய சபைக்கோ செல்கிறோம்.உள்ளத்தில் கவலை ஏற்பட்டது. கண்களிலிருந்து கண்ணீரும் வடிந்தது. இதனால் அல்லாஹ்வின் அருள் பார்வை நம்மீது பட்டு உள்ளத்தை ஒளிமயமாக்கியது. ஆனால் மஸ்ஜிதை விட்டு வெளியெறிய உடன் அந்நியப் பெண்கள் மீது பார்வை பட்டது.உடனே தாழ்த்திக் கொள்ளவில்லையெனில் நன்மைகள் செய்ததின் மூலம் ஏற்பட்ட பலன்கள் பாழாகிவிடுகின்றன. எனவே, இறைநேசராக நாம் ஆக நீளமான ரகாத்துகள் தொழவேண்டும். அதிகமாக வணங்க வேண்டும் திக்ருகள் அதிகம் செய்ய வேண்டும் என்பது அவசியமல்ல. மாறாக பாவங்களை விட்டு விலகி வாழ்வது





அவசியமாக இருக்கிறது. அல்லாஹ்விற்கு பிடிக்காத எந்த அசைவும் நம் அங்க அவயங்களிலிருந்து ஏற்படாத வண்ணம் நம் வாழ்க்கையை அமைத்துக் கொள்ளவேண்டும்.

**நஃப்ஸ், ஷைத்தானின் மோசடி**

எல்லா நேரங்களிலும் நாம் நமது நஃப்ஸை கண்கானித்துக் கொண்டே இருக்க வேண்டும். ஏனெனில், இந்த நஃப்ஸ், பாவத்தை அலங்காரப்படுத்தி காண்பிக்கின்ற கீழ்த்தரமான வேலையை செய்யும். அடுத்தவரின் சிறிய தவறையும் பெரிதாக சித்தரிக்கின்ற அதே வேளையில், தன்னுடைய பெரிய தவறையும் சிறிதாக குறைத்து மதிப்பிட செய்கிறது. இதனால் பிறரின் குற்றம், குறைகளைப் பற்றிய சந்தேகம் எழுந்ததுமே அவரை வெறுக்க தொடங்கி விடுகின்ற மனிதன், தான் செய்யும் தவறுகள் உறுதியாக தெரிந்தும் கூட தன்மீது வெறுப்பு வருவதில்லை. இவையனைத்தும் நஃப்ஸின் தந்திரங்களாகும்.

ஒரு உருது கவிஞர் நஃப்ஸை பற்றி கூறுகிறார் :

ہوس چھپ چھپ کے سینوں میں بنا لیتی ہے تصویریں

நப்பாசை மறைமுகமாக மனதில் பல சித்திரங்களை தீட்டிக் கொள்கிறது.

இதேப் போன்று ஷைத்தானும் மனிதனை வழிகெடுப்பதில் இருபத்தி நான்கு மணி நேரமும் ஈடுபட்டுள்ள கொடிய விரோதியாவான். அல்லாஹுதஆலா தனது திருக்குர்ஆனில் இவ்வாறு கூறுகிறான்.

وَقَيَّضْنَا لَهُمْ قُرَنَاءَ فَزَيَّنُوا لَهُمْ مَا بَيْنَ أَيْدِيهِمْ وَمَا خَلْفَهُمْ

மேலும், நாம் இவர்களுக்கு (ஷைத்தான்களிலிருந்து) கூட்டாளிகளை சாட்டிவிட்டோம்; அதனால் (அக்கூட்டாளிகள்) இவர்களுக்கு முன்னாலுள்ளதையும், இவர்களுக்குப் பின்னாலுள்ளதையும் அலங்காரமாக்கி காட்டினார்கள்.

(அல்குர்ஆன் : 41 : 25)

எனவே, ஷைத்தான் மனிதனுக்கு பாவங்களை அலங்காரமாக்கி காண்பிப்பதால் மனிதன் செய்கின்ற பல பாவங்களை பாவமென்றே கருதுவதில்லை. அப்படியே பாவம் என்று கருதினாலும் சிறிய பாவம் தான் பரவாயில்லை என அலட்சியமாக கருதுகிறான். பல முறை அதே பாவத்தை செய்து விடுகிறான். கடைசியாக ஒரு முறை செய்துக் கொள் என்ற எண்ணத்தின் மூலம் ஷைத்தான், பல நபர்களை பாவங்களுக்கு அடிமையாகவே ஆக்கி விடுகிறான்.

ஒரு புறம் நாம் முராகபாவும் செய்து கொள்கிறோம். தஹஜ்ஜுதுடைய தொழுகையையும் விடாமல் தொழுது வர முயற்சிக்கிறோம். ஐங்கால தொழுகைகளில் முதல் தக்பீரை பெற்றுக் கொள்ள விரைந்து செல்கிறோம். மறுபுறம் நமது கண்பார்வை பரிசுத்தமடைய வில்லை. நாம் நமது நாவை கட்டுப்படுத்துவதில்லை. பிறர் மனதை புண்படுத்தும் வார்த்தைகளை அள்ளி வீசி விடுகின்றோம். இப்படிப்பட்ட பண்பற்ற பழக்க வழக்கம் தான் அல்லாஹு தஆலாவை சென்றடையும் பாதையின் தடைக்கல்லாக நிற்கிறது, இதனை ஓர் உதாரணத்தின் மூலம் உணரலாம். நாம் அல்லாஹுதஆலாவின் பாதையில் சென்றுக் கொண்டிருக்கிறோம். ஆனால், பாவங்கள் எனும் கயிறு நம்மை பின்புறமாக இழுத்து விடுகிறது. முன்னேறி செல்ல விடுவதில்லை. எனவே, நாம் பாவங்களில் ஈடுபடும் பழக்கத்தை அடியோடு விட்டால் தான் அல்லாஹு தஆலாவின் பால் சென்றடைய முடியும்.

### பாவத்தை விடுவது லேசான காரியமல்ல

நன்மைகள் செய்து தீமைகளை விட்டு விலக நீங்கள் முயற்சிக்கும் பொழுது நன்மைகள் செய்வது லேசு என்பதையும், தீமைகளை விட்டு விலகுவது கடினம் என்பதையும் புரிந்து



பாவத்தை விட்டு பாதுகாத்து கொள்வது எப்படி?

கொள்ள முடியும். உதாரணமாக பொய் பேசாமலிருக்க முழு வாழ்க்கையும் பயிற்சி எடுக்க வேண்டியிருக்கும். ஒரு ஷைகு அவர்கள் தனது சீடருக்கு "நீங்கள் இன்று முதல் பொய் பேசாமலிருக்க முயற்சி செய்யுங்கள்!" என்று கட்டளை யிட்டார்கள். அவர் எவ்வளவு முயற்சித்தும் பழக்க தோஷத்தில் நாவிலிருந்து பொய் வெளிவந்துவிடும். இறுதியாக நாற்பது வருட கால முயற்சிக்குப் பின் இழிவையும், பிறர் பழிப்பையும் பொருட்படுத்தாமல் எது உண்மையோ அதுவே அவரின் நாவிலிருந்து வெளியாகுமளவிற்கு அவரது உள்ளம் பண்பட்டது. ஆக பழகிவிட்ட பாவங்களை விட்டு விலகுவது கடினமாகும். எனவே பாவங்களை உடனடியாக விடுவது அவசியமாகும்.

ஒரு கவிஞர் கூறுகிறார்

ہزار خوف ہو لیکن زبان ہو دل کی رفیق
یہی رہا ہے ازل سے قلندروں کا طریق

**அச்சங்கள் ஆயிரம் இருந்தாலும், நாவு உள்ளத்தின் நண்பனாக இருக்க வேண்டும்.**

**இதுவே, பழங்கால பண்பாளர்களின் பழக்கமாகும்.**

எனவே பொய் பேசும் பழக்கத்தை விடுவது இலேசான காரியமா? முயற்சித்து பாருங்கள்!

மற்றொரு கவிஞர் கூறுகிறார் :

مصحفی ہم تو سمجھتے تھے کہ ہوگا کوئی زخم
تیرے دل میں تو بہت کام رفو کا نکلا

**குர்ஆனை ஓதுபவனே! [அல்லாஹ்வின் அன்பால்] உன் இதயம் சிறிது காயப்பட்டிருக்கிறதென்று நாம் நினைத்தோம் – ஆனால், உனது அநேக செயல்பாடுகள் இன்னும் சீர்திருத்தம் பெற வேண்டியுள்ளது என தெரிய வந்தது.**

**கறைபடிந்த உள்ளம்**

பாவங்களை விட்டு விலகி வாழும் முயற்சியில் ஈடுபடாத மனிதன், பாவங்களை முற்றிலுமாக விடுவது சுலபமான காரியம் தான். நேரம் வரும் போது விட்டுவிடலாம் என எண்ணி நிம்மதியாக தொடர்ந்து பாவம் செய்து வருகிறான். ஆனால், அப்பாவங்களை அடியோடு அகற்ற முயற்சிக்கும் பொழுது தான், ''பாவங்களை விட்டு விலகுவது எவ்வளவு கடினம்'' என்பதை அவன் உணர்கிறான். பாவக்கறைகளால் உள்ளம் முழுவதும் காயப்பட்டிருக்கிறதே! களிம்பை எங்கெங்கு தேய்ப்பது என்று திகைப்படைகிறான். சற்று சிந்தித்துப் பார்த்தால் ஒவ்வொரு அங்க அசைவுகளிலும் ஒரு பாவம், தவறு நிகழ்ந்து கொண்டே இருப்பதை அறிந்து கொள்ளலாம்.

சில நேரங்களில் தொழுகையிலும் பாவத்தைப் பற்றி சிந்திக்கின்ற அளவிற்கு ஷைத்தான் நம்மை பாவத்தைப் பற்றிய சிந்தனையில் மூழ்கடித்து விடுகிறான். பாவத்தைப் பற்றிய சிந்தனை கூட வராமலிருப்பது சாதாரண காரியமல்ல. முதலில் உறுதியாக முடிவெடுக்க வேண்டும். பாவங்களை விட்டு விலகி வாழ்வதற்கான திட்டங்கள் தீட்டி செயல்பட வேண்டும். மேலும் அல்லாஹுதஆலாவிடம், பாவங்களை விட்டு பாதுகாப் பளிக்குமாறு துஆவும் செய்து கொண்டே இருக்க வேண்டும். இதனைத் தான் "முஜாஹதா" எனக் கூறப்படும். உணவு உட்கொள்ளாமலிருப்பது, முஜாஹதா அல்ல. அல்லாஹ் ஆகுமாக்கியவற்றை தேவையான அளவிற்கு உண்ணுங்கள்! உண்டபின் அல்லாஹ்விற்கு நன்றி செலுத்துங்கள்! மனம் போன போக்கில் போகாமல் மனோ இச்சைக்கு பலியாகாமல் பாவங்களை விட்டு விலகியிருப்பதே உண்மையான முஜாஹதாவாகும். ஆனால், இது சாதாரணமாக வந்துவிடாது. சிரமமான காரியமாகும்.





இது போன்ற ஆன்மீகத்தை சீர்படுத்தும் சபைகளில் பங்கெடுப்பதின் அசலான நோக்கம், நாம் நம்மை சீர்படுத்திக் கொள்வதாகும். இங்கு வருகை தந்து ''யா அல்லாஹ்! எங்களை இப்பாவங்களை விட்டு தவிர்ந்துக் கொள்ளும் பாக்கியத்தை வழங்கு!'' என இறைஞ்சி துஆ கேட்க வேண்டும். இதற்கு பின்னரும் நாம் நம்மை சீர்திருத்திக் கொள்ளாவிட்டால் நாவளவில் ''லா இலாஹ இல்லல்லாஹு'' என்று கூறிக் கொண்டிருப்போம். உள்ளம் பாவத்தை பற்றிய சிந்தனையில் இருக்கும். ஆனால் நாவு மட்டும் தஸ்பீஹ் செய்து கொண்டிருக்கும்.

**மனசாட்சி சிறந்த சாட்சி**

மனிதன் தனது உண்மை நிலையை அறிந்து கொள்ள தன் மனதிடம் கேட்டால், அது மிகச் சரியாக சொல்லிவிடும். லஞ்சம் வாங்காத ஒரே சாட்சி மன சாட்சியாகும். உண்மையை சொல்லும் ஒரே சாட்சி மன சாட்சி. நீங்கள் எவ்வளவு பத்தினித்தனமானவர் என்பதையும், மக்களுக்கு மத்தியில் நல்லவராக நடித்து வருகின்றீர்கள். ஆனால், அல்லாஹு தஆலாவை ஏமாற்ற முடியாது என்பதையும் அந்த மனம், மனம் திறந்து பேசும்.

**தன் குறைகளை கவனித்தால்,....**

முஜத்தித் அல்ஃபஸானி என்றழைக்கப்படும் மௌலானா ஷைகு அஹ்மது, ஸர்ஹிந்தீ (ரஹ்) அவர்கள், கடிதங்கள் மூலம் அற்புதமான விஷயங்களை எழுதி அனுப்புவார்கள். அக்கடிதங்களில் ஒன்றிற்கு "தீதே குசூர்" என்ற அழகிய தலைப்பிட்டு எழுதியுள்ளார்கள். ஹள்ரத் அவர்கள் தான் முதன் முதலில் தீதே குசூர் என்ற வார்த்தையை பயன் படுத்தினார்கள் தீதே குசூர் என்றால் தன்னிடமுள்ள குறைகள் தனக்கு

தெரியவருவதாகும். இது மிகப் பெரிய பாக்கியமாகும். அல்லாஹுதஆலா யாரை பிரியப்படுகிறானோ அவருக்கு இப்பாக்கியத்தை வழங்குகிறான். அவர்களின் தவறுகள் அவர்களுக்கு காட்சியளிக்க ஆரம்பித்துவிடும். அவர் செய்யும் சிறிய தவறுகளையும் அவருக்கு அல்லாஹ் வெளிப்படுத்தி விடுவான்.

ஒரு இறைநேசரிடம் ஒரு மனிதர் வந்து, ஹள்ரத்! நான் எனக்குள் இருக்கின்ற பாவங்களையும் குற்றங்குறைகளையும் சிந்தித்து தவிர்ந்து கொண்டே வருகிறேன். எனக்குள்ளாக இருக்கின்ற குற்றங்குறைகள் வந்து கொண்டே இருக்கின்றன என்று கேட்டார். அதற்கு அப்பெரியார், தன் குறை தனக்கு தெரிவதென்பது, அம்மனிதன் முழு சீர்திருத்தம் பெறுவதன் அடையாளமாகும். நமக்குள் இருக்கும் பாவங்களை விட்டுவிட துவங்கி விட்டால் நமக்குள் இருக்கும் எண்ணிலடங்கா பாவங்கள் தெரியவர ஆரம்பிக்கும். தன் குறைகள் தனக்கு தெரிய ஆரம்பித்து விட்டால், அதுவே மனிதனை முழுமையான சீர்திருத்தத்தின் பக்கம் கொண்டு செல்கிறது. இல்லையெனில் மக்களுக்கு மத்தியில் நல்லவராக காட்சியளிப்பார். எல்லோருக்கும் முன்னால் நல்லவராக இருப்பார். ஆனால் தனிமையில் பாவங்களையும், அல்லாஹ்வின் விரோதிகள் செய்யும் இழிசெயல்களையும் செய்து கொண்டிருப்பார். இவரைப்பற்றி ஒரு கவிஞர் படம் பிடித்துக் காட்டுகிறார்:

سبحہ برکف توبہ برلب دل پر از لطف گناہ

معصیت راخندہ می آید بر استغفار ما

கரம் தஸ்பீஹ் மணியை பிடித்துள்ளது, நாவு பாவமன்னிப்பு தேடிக் கொண்டிருக்கிறது.

ஆனால், உள்ளம் பாவங்களை ரசித்துக் கொண்டிருக்கிறது.





நாம் கேட்கும் பாவமன்னிப்பைப் பார்த்து நமது பாவங்களே சிரித்து விடுகின்றன.

### பாவத்தை விடுவது எப்படி?

இப்பொழுது மனிதன் பாவத்தை விட்டு விலகுவது எவ்வாறு சாத்தியமாகும்? என்பதைப் பற்றி பார்ப்போம். அன்பு சகோதரர்களே! ஒரு பொருளின் நஷ்டத்தைப் பற்றி நன்கு தெரிந்து விடுமானால், அதனை விட்டு தவிர்ந்திருப்பது மிகவும் லேசாகும். உதாரணமாக, பாம்பைப் பார்ப்பதற்கு எவ்வளவு அழகாக இருக்கிறது. அதன் வடிவமைப்பும், பளபளப்பாக தெரிகின்ற நிறமும், மிருதுவான அதன் தோலும் எவ்வளவு கவர்ச்சியாக உள்ளது. ஆனாலும், எந்த தைரியசாலியும் அதை கரத்தால் பிடிப்பதில்லை. காரணம், தொட்டால், கொத்தும். கொத்தினால், மனிதன் மரணமடைந்து விடுவான் என்ற பயம். இதனால் பாம்பை தொடாமல் இருப்பது மட்டுமல்ல. அதன் அருகிலும் யாரும் செல்வதில்லை. இதே போன்றுதான், இறைநேசர்கள் தனது ஆன்மா மரணமடைவதை முன்வைத்து பாவத்தின் பக்கமே செல்வதில்லை.

ஒருவர் உங்களுக்கு ஒரு மிட்டாய் பெட்டியை கொடுத்து, இது இன்ன ஊரில் தயாரானது. இதில் 100 லட்டுகள் உள்ளன. ஆனால், ஒரே ஒரு லட்டில் விஷம் கலந்துள்ளது. இவைகளை தங்களுக்காகவே கொண்டு வந்தேன். சாப்பிடுங்கள்! எனக் கூறினால் தாங்கள் சாப்பிடுவீர்களா? கண்டிப்பாக சாப்பிட மாட்டீர்கள். மாறாக மறுத்து விடுவீர்கள். தொண்ணூற்று ஒன்பது லட்டுகள் விஷமற்றவையாக இருந்த போதிலும் சாப்பிட மாட்டீர்கள். ஏனெனில், நாம் சாப்பிடும் அந்த லட்டு விஷமுள்ள லட்டாக இருந்தால் மரணமடைந்து விடுவோம் என்ற பயத்தின் காரணமாக எந்த லட்டையும் சாப்பிடமாட்டோம். ஆக நூற்றில்

ஒரு சதவீதம் உயிருக்கு ஆபத்து என்று தெரிந்தாலும் அதில் ஈடுபடுவதை விட்டு நாம் தவிர்ந்து கொள்கிறோம் என்பது இவ்வுதாரணத்தின் மூலம் நன்கு தெரியவருகிறது. இதே போன்று ஒரு சதவீதம் ஈமானுக்கு ஆபத்து என்றாலும் அதைவிட்டு தவிர்ந்திருக்க வேண்டும்.

இதே போன்று மின்கம்பியை எவரேனும் தொட்டுப் பார்த்ததுண்டா? யாரும் தொடமுற்படமாட்டார்கள். ஏனெனில் இன்ன மனிதரின் கை மின் கம்பியில் பட்டதால், அவர் மரணமடைந்து விட்டார் என்பதை கேள்விப் படுகிறார்கள். எனவே, யாரும் அதை தொடுவதில்லை. இதே போன்று இன்ன மனிதர் இந்த பாவத்தை செய்ததால் எவ்வளவு அவப்பெயரும், அவமரியாதையும் ஏற்பட்டது. எனவே நாம் அந்த தவறை செய்யக் கூடாது என்ற முடிவிற்கு நல்லடியார்கள் வருகிறார்கள்.

## மறுமையில் அவமரியாதை

ஒரு வாலிபர் ஒரு பெரியாரிடம் வந்து, ''ஹள்ரத் அவர்களே! அந்நியப் பெண்களை பார்க்கக் கூடாது என்று தாங்கள் கூறுகிறீர்கள். ஆனால், நான் வாலிபனாக இருக்கிறேன். கடைவீதியை கடக்கும் போது பார்வையை என்னால் கட்டுப்படுத்த முடிவதில்லை. எவ்வாறு பார்வையை கட்டுப்படுத்திக் கொள்வது?'' எனக் கேட்டார். அதற்கு அப்பெரியார், "எனக்கு ஒரு வேலையை செய்து கொடுத்தால், பார்வையை எப்படி கட்டுப்படுத்துவது என்ற ரகசியத்தை நான் கூறுகிறேன்" என்று கூறினார்கள். இதனை கேட்ட அவ்வாலிபர், ''ஹள்ரத் அவர்களே! தாராளமாக அந்த வேலையை செய்கிறேன்'' எனக் கூறி ஆர்வத்தை வெளிப்படுத்தினார். பிறகு அப்பெரியார், "கடைவீதியின் இந்த இடத்தில் ஒரு பெரியவர் வசிக்கின்றார். ஒரு கோப்பைப் பாலை அவருக்கு கொடுத்துவிட்டு வர வேண்டும். கொண்டு செல்லும் போது ஒரு சொட்டு பால் கூட சிந்தக்கூடாது"





என்று கூறினார். அவ்வாலிபர், கவலைப்படாதீர்கள், கண்டிப்பாக செய்கிறேன் என்றார். பிறகு அப்பெரியார், "நான் உங்களுடன் ஒரு மனிதரை அனுப்பி வைப்பேன். பால் எந்த இடத்தில் கொட்டினாலும் அதே இடத்தில் அவர் உங்கள் கண்ணத்தில் ஓங்கி அறைவார்" என்றார்கள். இதனையும் அவ்வாலிபர் ஏற்றுக் கொண்ட பின்னர், கோப்பை நிரம்ப பாலை ஊற்றி கொடுத்து விட்டு, பலசாலியான ஒரு நபரை அழைத்து, ''இவ்வாலிபருடன் செல்லுங்கள்! கோப்பையிலிருந்து பாலை இவர் சிந்தும் போது நடுத்தெருவில் வைத்தே செருப்பால் இரண்டு அறை வையுங்கள்!'' என்று கூறி அனுப்பிவைத்தார்கள். பால் கோப்பையை கையில் எடுத்த அவ்வாலிபர் மிக கவனத்தோடு ஒரு சொட்டு பால் கூட கீழே விழாமல் பாதுகாத்து கொண்டு சென்று ஒப்படைத்து விட்டு மிக்க மகிழ்ச்சியோடு திரும்பி வந்து, ஹள்ரத் அவர்களே! பாலை கீழே சிந்தாமல் அப்பெரியவரிடம் கொடுத்து விட்டேன். எனவே, இப்பொழுது பார்வையை எவ்வாறு பாதுகாத்துக் கொள்வது? எப்படி கட்டுப்படுத்துவது? என்பதைப் பற்றிய விபரத்தை கூறுங்கள்! எனக் கேட்கலானார். அதற்கு அப்பெரியார், "பாலை நீங்கள் கொண்டு செல்லும் போது எத்தனை பெண்களை பார்த்தீர்கள்?" எனக் கேட்ட போது, "ஹள்ரத் அவர்களே! அறவே அதன் பக்கம் என் கவனம் செல்லவில்லை" என பதிலளித்தார். ஏன் அதன் பக்கம் கவனம் செல்லவில்லை எனத் திரும்ப கேட்க, அவ்வாலிபர், ''கோப்பையிலிருந்து பால் கொஞ்சம் கொட்டினாலும், என்னுடன் தாங்கள் அனுப்பி வைத்த அந்த மனிதர் என்னை கடைவீதியின் நடுத் தெருவில் நாலுபேருக்கு மத்தியில் செருப்பால் அடித்து விடுவார். எனக்கு கேவலமாகிவிடும் என்ற பயமிருந்ததால் வேறு பக்கம் கவனம் செல்ல வில்லை" என்றார். இப்பதிலை கேட்ட அப்பெரியார், கியாமத் நாளில் எல்லா மனிதர்களின் முன்னிலையில் கேவலமடைந்து விடுவோம்" என்ற பயம் இறை நேசர்களின்

உள்ளத்தில் எப்பொழுதும் குடி கொண்டிருப்பதால் அவர்களின் பார்வை அந்நியப் பெண்களின் பக்கம் செல்வதில்லை" என்று கூறினார்கள்.

இமாம் கஸ்ஸாலி (ரஹ்) அவர்கள், மிகவும் அழகான ஆச்சரியமான ஒரு விஷயத்தை குறிப்பிடுகிறார்கள். அதாவது "பாவங்களின் பாதிப்புகளை எவர் நன்கு விளங்கி வைத்துள்ளாரோ அவர்தான் மிகப் பெரிய ஆலிம்" என்று கூறுகிறார்கள்.

ஒரு முறை இருதய அறுவை சிகிச்சை நிபுணரோடு (ஹார்ட் ஸ்பெஷலிஸ்ட்) விருந்து உண்டுக் கொண்டிருந்தேன். முன்னால் கோழி போன்ற பல்வேறு அசைவ ஐடெம்கள் இருந்தும் கூட அந்த மருத்துவர், காய்கறிகளையே சாப்பிட்டுக் கொண்டிருந்தார். வீட்டுக்காரர் வந்து, டாக்டர்! கறியை எடுத்துக் கொள்ளுங்கள்! என்று வற்புறுத்தியதினால், சிறிதளவு கறியை எடுத்துக் கொண்டார். இன்னும் கொஞ்சம் எடுத்துக் கொள்ளுங்கள்! என நாங்கள் கூறியதற்கு நான் இருதய அறுவை சிகிச்சை செய்பவனாக இருக்கிறேன். இருதய அறுவை சிகிச்சை செய்யும் போது இருதயத்தில் எவ்வளவு கொழுப்பு சேர்ந்து விடுகிறது என்பதை நான் கண்கூடாக பார்த்துள்ளேன். மாமிசம் அதிகம் சாப்பிடுவதால் தான் அப்படி உண்டாகிறது. இதனால் கறி சாப்பிடவே எனக்கு மனம் வருவதில்லை எனக் கூறினார்.

அச்சமயம் எனக்குள் ஓர் எண்ணம் தோன்றியது. அதாவது கொழுப்பு சத்துள்ள உணவுகளினால் ஏற்படும் பாதிப்புகளை இவர் நன்கு அறிந்துவிட்டதால் கொழுப்பு சத்துள்ள மாமிசங்களை விட்டு தவிர்ந்திருப்பது, இவருக்கு சுலபமாக இருக்கிறது. இதே போன்று பாவங்களின் பாதிப்புகளை நன்கு விளங்கிய ஆலிம்களுக்கு அப்பாவங்களை விட்டு விலகியிருப்பது சுலபமாக இருக்கிறது. இவ்வுலகில் பாவங்களில் ஈடுபடும் போது இன்பமாக





இருந்தாலும் நாளை மறுமையில் கேவலமடைய வேண்டியதாயிருக்கும் என்ற அச்சம் அவர்களின் உள்ளங்களில் சதா இருந்து கொண்டே இருக்கும். இப்படிப்பட்ட இறையச்சம் நம் இதயங்களிலும் வருவதற்காக நாம் துஆ செய்து கொண்டே இருக்க வேண்டும்.

اَللّٰهُمَّ اِنِّىْ اَسْئَلُكَ مِنْ خَشْيَتِكَ مَا تَحُوْلُ بِهٖ بَيْنِىْ وَبَيْنَ مَعْصِيَتِكَ

**பொருள்** : யா அல்லாஹ்! நான் உனக்கு மாறு செய்வதை விட்டு என்னை தடுக்கின்ற இறையச்சத்தை எனக்கு வழங்குவாயாக என நான் வேண்டி கேட்டுக் கொள்கிறேன்.

**அல்லாஹ்வின் அச்சமும், அன்பும்**

கவனத்துடன் கேளுங்கள்! இரண்டு விஷயங்கள் மிக முக்கியமானவைகளாகும். ஒன்று, அல்லாஹ்வின் அச்சம் மற்றொன்று, அல்லாஹ்வின் அன்பு. இவ்விரு அருட்கொடைகள் கிடைத்துவிட்டால் அவருக்கு உலகின் அனைத்து பாக்கியங்களும் கிடைத்து விட்டது என விளங்கிக் கொள்ளுங்கள்! அல்லாஹ்வின் அச்சமிருந்தால் பாவங்களை விட்டு தவிர்ந்திருப்பார். அல்லாஹ்வின் மீது அன்பு இருந்தால் வணக்க வழிபாட்டில் ஆர்வத்துடன் ஈடுபடுவார். இபாதத்தில் இன்பத்தை காண்பார். இவைதான் மிகப் பெரிய நிஃமத்துகளாகும். நமது வாழ்வின் நோக்கமும் இவைகள் தான். எனவே அல்லாஹ்விடம் இவ்விரு நிஃமத்துகளை கேட்டுக் கொண்டே இருக்க வேண்டும்.

دن رات ماہ وسال سے آگے نہیں گئے
ہم بھی تیرے خیال سے آگے نہیں گئے
لوگوں نے تجھ سے مانگا ہر روز کچھ نیا
ایک ہم تیرے سوال سے آگے نہیں گئے

**இரவும் பகலும் மாதம் மற்றும் வருடத்தை விட முந்திவிடவில்லை.**

**நாங்களும் உன் நினைவை விட்டு முன்னேறி சென்று விடவில்லை.**

**மனிதர்கள் உன்னிடத்தில் அனுதினமும் புதிய புதிய விஷயங்களை கேட்கிறார்கள்.**

**நாங்கள் உன்னிடம் ஒன்றை தவிர வேறெதையும் கேட்கவில்லை.**

யா அல்லாஹ்! உன்னிடம் கேட்பவர்கள் ஒவ்வொரு நாளும் ஒவ்வொன்றை புதிது புதிதாக கேட்கிறார்கள். ஆனால் இந்த எளியவன் உன்னிடம் கேட்பது ஒன்றுதான். யா அல்லாஹ்! உன் அன்பையும், அச்சத்தையும் தருவாயாக! இவ்விரு அருட்கொடைகளும் கிடைத்து விட்டால், இவ்வுலக வாழ்க்கை இன்பமாக சுபிட்சமாக ஆகிவிடும்.

எனவே, நம்மை நாமே பாவங்களை விட்டு தற்காத்துக் கொள்ள வேண்டும். இதயத்தில் இறையச்சம் இருந்தால், பாவங்களை விட்டு தவிர்ந்திருப்பது சுலபமாகும்.

**ஒரு ஹாஜியின் இறையச்சம்**

ஹள்ரத் சுலைமான் பின் யஸார் (ரஹ்) அவர்கள் தனது நண்பர்களுடன் ஹஜ்ஜிற்கு புறப்பட்டார்கள். நடுவழியில் கொண்டு வந்த உணவு பொருட்கள் காலியாகிவிட்டதால் அந்த நண்பர்கள், "தாங்கள் கூடாரத்திலேயே தங்கியிருங்கள். நாங்கள் அருகிலுள்ள கிராமத்திற்கு சென்று உணவு பொருட்களை வாங்கிவருகிறோம்" என்று கூறி சென்றுவிட்டார்கள். இவர்கள் மட்டும் தனியாக கூடாரத்தில் இருந்தார்கள். சமயம் பார்த்து அங்கு ஒரு பெண் வந்து அவர்களை நோக்கி ஏதோ சைகை செய்தாள். பசியாளி போல் ஏதோ உண்ண கேட்கிறாள் என்றெண்ணி ரொட்டி துண்டை கொடுத்தார்கள். அதற்கு அப்பெண், "நான் ரொட்டியை கேட்கவில்லை. ஒரு பெண் ஆணிடத்தில் எதை விரும்புவாளோ அதை கேட்கிறேன்" என்றாள். இதை கேட்டு திடுக்குற்ற





அப்பெரியார் "அல்லாஹ்வின் இல்லத்தை தரிசிப்பதற்காக ஹஜ்ஜுக்கு நான் புறப்பட்டு விட்ட பிறகும் கூட அல்லாஹ்வை விட்டு என்னை தூரமாக்கும் முயற்சியில் ஷைத்தான் ஈடுபட்டுள்ளான். எப்படியாவது என்னை கெடுத்து விடலாம் என்று ஷைத்தான் இப்பொழுதும் எண்ணுகிறான். என் ஈமானை பாழாக்க இப்பெண்ணை என்னிடம் அனுப்பியுள்ளான் என்றெண்ணிய அவர்கள் அழ ஆரம்பித்துவிட்டார்கள். இவர்கள் அழுவதை பார்த்த அப்பெண் அங்கிருந்து ஓடி விட்டாள். அவர்களோ அழுதழுது அப்படியே தூங்கிவிட்டார்கள். கனவில் ஹள்ரத் யூசுஃப் (அலை) அவர்களை பார்க்கும் பாக்கியம் கிடைத்தது. ஹள்ரத் யூசுஃப் (அலை) அவர்கள், இவர்களை பாராட்டினார்கள். அதற்கு அப்பெரியார், ஹள்ரத் யூசுப் (அலை) அவர்களிடம், நீங்கள் தான் மிகப் பெரிய சாதனைப் படைத்தீர்கள். தங்களை ஜுலைகா அவர்கள் அரண்மனையில் அடைத்து வைத்து

هيت لك விரைந்து வாரும் எனக் கூறிய போது,

معاذ الله அல்லாஹ் பாதுகாப்பானாக! என்று கூறி தப்பித்துக் கொண்டீர்கள்" என்று கூறினார்கள்.

இதைக் கேட்ட ஹள்ரத் யூசுஃப் (அலை) அவர்கள், "நான் அல்லாஹு தஆலாவின் நபியாக இருக்கிறேன். அல்லாஹ்வின் பிரத்தியேக உதவி என்னுடன் இருந்ததால் அப்பாவத்தை விட்டு தப்பித்துக் கொண்டேன். எனவே இது பெரிய ஆச்சரியத்திற்குரிய விஷயமல்ல. தாங்கள் நபியல்ல, அல்லாஹ்வின் நேசரான ஒரு வலியாக இருந்து கொண்டு நபிமார்கள் சாதித்ததை செய்து காண்பித்ததுதான் மிகப்பெரிய ஆச்சரியம்" என்று கூறினார்கள்.

முந்திய நபிமார்கள் செய்து காண்பித்த சாதனைகளை செய்து காண்பிக்கும் நல்லடியார்கள் இருக்கத்தான் செய்கிறார்கள்.

## ஸஹாபாப் பெருமக்களின் பரிசுத்தமான வாழ்க்கை

நபி ﷺ அவர்களின் தோழர்களான ஸஹாபாப்பெருமக்கள், ரோம் நாட்டிற்கு சென்றார்கள். ரோம் வாசிகள் தங்கள் பெண்களிடம் "நீங்கள் அரை நிர்வாணமாக இம்முஸ்லிம்களுக்கு முன்னால் வந்து நில்லுங்கள். இவர்களின் மனைவியர்களை சந்தித்து நீண்ட நாட்களாகிவிட்டன. இவர்களின் பார்வை உங்கள் மீது பட்டால் இவர்களுடனுள்ள அல்லாஹ்வின் உதவி அகன்றுவிடும்" என்று கூறி, தங்கள் மங்கையர்களை அலங்காரப்படுத்தி அரை நிர்வாணமாக்கி நிறகவைத்தார்கள். இதை உணர்ந்து கொண்ட முஸ்லிம்களின் தளபதி உரத்த குரலில்

قُلْ لِّلْمُؤْمِنِيْنَ يَغُضُّوْا مِنْ اَبْصَارِهِمْ

(நபியே!) முஃமின்களுக்கு நீர் கூறுவீராக! அவர்கள் தங்கள் பார்வைகளை தாழ்த்திக் கொள்ளவும்! (அல் குர்ஆன் 24 : 30) என்ற இறைவசனத்தை ஓதி காண்பித்த மாத்திரத்தில் படையினர் அனைவரும் தங்கள் பார்வையை தாழ்த்திய வண்ணம் அவ்வூரை கடந்து சென்றுவிட்டனர். மதீனா வந்தடைந்ததும் அங்கிருந்தவர்களுக்கு நடந்த நிகழ்ச்சியை கூறினார்கள். அவர்களில் ஒருவர், "அங்குள்ள கட்டிடங்கள் எவ்வளவு உயரமாக இருந்தன" என்று கேட்டார். அதற்கவர்கள் "எங்கள் படைத் தளபதியின் நாவிலிருந்து பார்வையை தாழ்த்திக் கொள்ளுங்கள்! என்ற இறைவசனத்தை நாங்கள் கேட்ட மாத்திரத்தில் அனைவரும் கீழ் நோக்கி பார்க்க ஆரம்பித்து விட்டோம். எனவே அங்குள்ள கட்டிடங்கள் எவ்வளவு உயரம் என்பதை நாங்கள் பார்க்கவில்லை எனக் கூறினார்கள்.

ஆக, அடியான் அல்லாஹ்விற்கு அஞ்ச ஆரம்பிக்கும் போது பாவங்களை விட்டு தவிர்ந்திருப்பது அவனுக்கு லேசாகிவிடுகிறது. ஐந்து வயது சிறுவன் பார்த்து கொண்டிருப்பதை அறிந்தாலும் பாவங்களை விட்டு விலகிக்





கொள்கிறான். யாரும் பார்க்கவில்லை என்பது உறுதியானதும் மீண்டும் பாவத்தில் ஈடுபடுகிறான். இதற்கு காரணம், அல்லாஹ் என்னை பார்த்து கொண்டே இருக்கிறான் என்ற நம்பிக்கை இவனது உள்ளத்திலில்லை. அல்லாஹ் என்னை எப்பொழுதும் பார்த்து கொண்டே இருக்கிறான் என்ற உறுதி வந்துவிட்டால் மனிதன் அறவே பாவங்களை செய்ய மாட்டான்.

## ஒரு இறைநேசரின் இறை உதிப்பு

ஹள்ரத் அதா இப்னு ரபாஹ் (ரஹ்) அவர்கள் தாபியீன்களில் மிகப் பிரபலமாக திகழ்ந்தார்கள். இமாம் அஃலம் அபூஹனீஃபா (ரஹ்) அவர்களின் ஆசிரியர்களின் பட்டியலில் இவர்களின் பெயரும் இடம் பெற்றுள்ளது. இமாம் புகாரி (ரஹ்) அவர்கள், ஹள்ரத் அதா (ரஹ்) அவர்ளின் வாயிலாக பல நபிமொழிகளை அறிவித்துள்ளார்கள். இவர்கள் "இக்மாலுஷ் ஷியம்'' என்ற அற்புதமான ஒரு கிதாபை எழுதியுள்ளார்கள். ஹள்ரத் மௌலானா யஹ்யா (ரஹ்) அவர்கள், ரமளான் மாதத்தில் தமது சபைகளில் இந்நூலை வாசித்து காண்பிப்பவர்களாக இருந்தார்கள். அல்லாஹ் இவர்களின் உள்ளத்தில் உதிக்கச் செய்த மிக ஆச்சரியமான பல விஷயங்களை அதில் குறிப்பிட்டுள்ளார்கள்.

ஒரு முறை அல்லாஹுதஆலா இவர்களின் உள்ளத்தில் உதிக்கச் செய்த மிக ஆச்சரியமான ஒரு விஷயத்தைப் பற்றி விவரிக்கிறார்கள். அதாவது அதாவே! மக்களிடம் கூறுவீராக! அவர்கள் பாவங்களில் ஈடுபடும் போது உலகத்தார்கள் பார்க்கின்ற கதவுகளை மூடிவிடுகிறார்கள். ஆனால், நான் (இறைவன்) பார்க்கின்ற கதவை மூடுவதில்லை. பார்க்கக் கூடியவர்களில் என்னை மிக பலகீனமானவனாக கருதிக் கொண்டார்களா என்ன! (அல்லாஹு அக்பர் கபீரா).

எவருடைய இதயத்தில் இறையச்சம் மிகைத்து விடுகிறதோ அவரை ஷைத்தான் மிகைத்துவிட முடிவதில்லை. ஷைத்தான் எவ்வளவு முயற்சித்தாலும் அவனது முயற்சி

தோல்வியை சந்திக்கிறதே ஒழிய எந்த தவறையும் அவர் செய்யாதவாறு அல்லாஹ் அவரை பாதுகாத்துக் கொள்கிறான். இப்படிப்பட்ட அடியார்களைப் பற்றி

إِنَّ عِبَادِي لَيْسَ لَكَ عَلَيْهِمْ سُلْطَٰنٌ ۚ وَكَفَىٰ بِرَبِّكَ وَكِيلًا

"நிச்சயமாக என்னுடைய அடியார்களின் மீது எவ்வித அதிகாரமும் (ஷைத்தானே!) உனக்கில்லை. உன்னுடைய ரப்பு பொறுப்பாளியாக இருக்க போதுமானவன்'' (அல் குர்ஆன் - 17:65)

என்று கூறுகிறான்.

## ஹள்ரத் ராபியா (ரஹ்மதுல்லாஹி அலைஹா) அவர்கள் கேட்ட ஆச்சரியமான இரு துஆக்கள்

ஹள்ரத் ராபியா (ரஹ்) அவர்கள் இறைநேசச் செல்வியாக வாழ்ந்தவர்கள். தஹஜ்ஜுத் தொழுதுவிட்டு அழகான இரு துஆக்களை கேட்பார்கள். ஒன்று, இரக்கமுள்ள இறைவனே! பகல் சென்றுவிட்டது. இரவும் வந்துவிட்டது. உலகிலுள்ள அரசர்கள் அனைவரும் தமது கதவுகளை தாழிட்டுக் கொண்டனர். ஆனால், உன் வாசல் மட்டும் இப்பொழுதும் திறந்தே இருக்கிறது. நான் உனக்கு முன்பாக எனது முந்தானையை விரித்து ஏந்துகிறேன். நீ அதனை நிரப்பி விடுவாயாக! என துஆச் செய்வார்கள். இந்த இறைநேசச் செல்வி எந்தளவிற்கு அல்லாஹுத் தஆலாவின் மகத்துவத்தை விளங்கி துஆச் செய்கின்றார்கள் பார்த்தீர்களா? அல்லாஹ்விற்கும் அவர்கள் கேட்ட துஆ எவ்வளவு பிடித்தமானதாக இருந்திருக்கும் என்பதை நினைத்துப் பாருங்கள்.

அவர்கள் கேட்ட இரண்டாவது துஆ : யா அல்லாஹ்! வானத்தை பூமியின் மீது விழாமல் நீ தடுத்து வைத்துள்ளதைப் போன்று ஷைத்தான் எனமீது ஆதிக்கம் செலுத்துவதை விட்டு தடுத்து விடுவாயாக! என துஆச் செய்வார்கள்.

எனவே, நாமும் அல்லாஹுத்தஆலாவிடம் இதே போன்று துஆச் செய்தால், அந்த கிருபையுள்ள இரட்சகன் நமது





காரியங்களை இலகுவாக்கிவிடுவான். யா அல்லாஹ்! பாவங்களை விட்டு தவிர்ந்திருப்பது எங்களுக்கு சிரமமாக இருக்கிறது. ஆனால் அப்பாவங்களில் ஈடுபடாமல் எங்களை பாதுகாப்பது உனக்கு லேசான காரியமாகும். எனவே நாங்கள் எங்களை முழுமையாக உன்னிடம் ஒப்படைத்துவிடுகிறோம். யா அல்லாஹ்! பாவத்தின் பாதிப்பை விட்டும், அதனால் ஏற்படும் கேவலத்தைவிட்டும் எங்களை நீ பாதுகாப்பாயாக! வழிபட்டு நடப்பதையும் அதனால் ஏற்படும் கண்ணியத்தையும் எங்களுக்கு நீ வழங்குவாயாக! என்று துஆ செய்து வர வேண்டும்.

ஹள்ரத் அதா (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்: அல்லாஹுதஆலா எனதுள்ளத்தில் ஒரு விஷயத்தை உதிக்கச் செய்தான். அதாவது மக்களே! உங்களுக்கு உணவு வசதிகளில் சிறிதளவு குறைவு ஏற்பட்டாலும் உடனே தனது நண்பர்கள் கூடியிருக்கும் சபைகளில் என்னைப் (இறைவனைப்) பற்றி முறையிட ஆரம்பித்து விடுகிறீர்கள். ஆனால் நீங்கள் செய்த செயல்களின் குறிப்பேடு பாவங்களால் நிரம்பிய வண்ணம் என்னிடம் வரும் போது மலக்குகள் கூடியிருக்கும் சபையில் உங்களைப் பற்றி நான் முறையிடுவதில்லை என்பதை மக்களுக்கு தெரிவித்து விடுவீராக! அல்லாஹு அக்பர் கபீரா! நம்மை படைத்த இரட்சகன் நம்மீது எவ்வளவு அன்பு வைத்துள்ளான் எவ்வளவு பாசமாக உள்ளான் என்பதை சிந்தித்து பார்க்கும் போது ஏற்படுகின்ற திகைப்பிற்கு அளவே இல்லை.

## அறிந்திருந்தும் சகித்துக் கொள்வது

அல்லாஹ்விடமுள்ள இரு தன்மைகள் நம்மை ஆச்சரியத்தில் ஆழ்த்துகின்றன. ஒன்று, அல்லாஹ்வின் அறிவாற்றல். இரண்டாவது, அல்லாஹ்வின் சகிப்புத் தன்மை.

நாம், எதுவரை அடுத்தவரின் உண்மைநிலை தெரியவராதோ அதுவரை அவரோடு நளினமாகவும், சகிப்புத் தன்மையுடனும் நடந்து கொள்கிறோம். ஆனால், அவரது உண்மை

நிலை தெரிந்துவிட்டால் அவர் மீது கோபமடைகிறோம். ஆனால் அல்லாஹுதஆலாவின் நிலை என்னவெனில், அடியான் பாவம் செய்ய நாடியது முதல் அவனது மனதில் அலைமோதுகின்ற அபிலாஷைகளையும் இறுதியாக அந்த பாவத்தை செய்துவிடுவது வரையுள்ள எல்லா நிலைகளையும் நன்கறிந்தும் கூட உடனே அவனை தண்டிப்பதில்லை. பொறுமையுடன் மென்மையாக நடந்து கொள்கிறான். உண்மையில் அனைத்தையும் அறிந்திருந்தும் மன்னிப்பவன் அல்லாஹ் ஒருவனே. அல்லாஹ் தன் திருமறையில், وَكَانَ اللّٰهُ عَلِيْمًا حَلِيْمًا "அல்லாஹ் முற்றும் அறிந்தவனாகவும். சாந்தமுள்ளவனாகவும் இருக்கிறான்" (அல்குர்ஆன் 33 : 51) எனும் வசனத்தில் இவ்விரு தன்மைகளும் தனக்குள் ஒருசேர இருப்பதாக கூறியுள்ளான்.

நாம் பாவம் செய்கிறோம். ஆனால், அந்த கிருபையுள்ள தயாளன் உடனே தண்டனையை கொடுத்துவிடுவதில்லை. மாறாக எனது அடியான் தனது தவறுகளை உணர்ந்து பாவமன்னிப்பு கேட்டு திருந்தி விடுவான் என போதுமான அவகாசத்தை வழங்கி வருகிறான். அவன் இந்தளவிற்கு கிருபையுள்ளவனாக இருக்கும் பட்சத்தில் நாம் சிறிய, பெரிய அனைத்து பாவங்களை விட்டு விலகி தவ்பாச் செய்வது அவசியமாகும்.

### பாவத்தை லேசாக கருதாதே!

அடியான் ஒரு பாவத்தை சிறியதாக கருதும் போது அப்பாவம் சிறியதாக இருப்பதில்லை. அல்லாமா இப்னு கைய்யூம் (ரஹ்) அவர்கள் ஒரு அபூர்வமான விஷயத்தை எழுதியுள்ளார்கள். நண்பனே! பாவம் சிறியது அல்லது பெரியது என்று பார்க்காதே! மாறாக நீ யாருடைய கட்டளைக்கு மாறு செய்கிறாயோ இந்த அல்லாஹ்வின் மகத்துவம் மற்றும் கண்ணியம் எவ்வளவு பெரியது என்பதை சிந்தித்துப் பார்!





ஒருவர், "நான் பிரதமரிடம் சிறிது முறைகேடாக நடந்து கொண்டேன்" எனக் கூறினால் அதை கேட்பவர் "பிரதமரிடம் சிறிது முறைகேடாக நடந்து கொண்டது, அது சிறிய விஷயமல்ல. மாறாக அது மிகப்பெரிய தவறு" எனக் கூறுவார். இதே போன்று அகிலத்தின் அதிபதியின் தர்பாரில் எந்த பாவமாக இருந்தாலும் அது சிறிய குற்றமாக கணிக்கப்படாது, ஒரு ஹதீஸில், لَا تُحَقِّرَنَّ صَغِيْرَةً "எந்த பாவத்தையும் சிறியது என லேசாக கருத வேண்டாம்" என்று நபி ﷺ அவர்கள் கூறியுள்ளார்கள். பொடிக்கற்கள் ஒன்று சேரும் போது மலைப் போன்றாகிவிடுகிறதல்லவா! அது போல் எல்லா விதமான பாவங்களையும் பயங்கரமானதாக கருத வேண்டும். எனவே, நாம் சிறிய பெரிய எல்லா பாவங்களை விட்டும் அல்லாஹுதஆலாவிடம் உண்மையான முறையில் பாவமன்னிப்புத் தேடி தவ்பா செய்ய வேண்டும். இதுவே தஸவ்வுஃப் எனும் ஆத்மீக சுத்திகரிப்பின் அடிப்படை நோக்கமாகும்.

### தஸவ்வுஃப்பின் நோக்கம்

ஹள்ரத் மௌலானா சைய்யித் சுலைமான் நத்வி (ரஹ்) அவர்கள், ஹள்ரத் மௌலானா அஷ்ரஃப் அலி தானவி (ரஹ்) அவர்களிடம் "ஹள்ரத் அவர்களே! தஸவ்வுஃப்-ஆத்மீக சுத்திகரிப்பின் நோக்கம் என்ன?" என வினவியதற்கு, "மனிதனின் ஒவ்வொரு நாடி நரம்புகளிலிருந்து பாவக்கறை நீங்கி விடுவதாகும். மேலும் அங்க அவயங்கள் அனைத்தை விட்டும் பாவங்கள் அகன்று விடுமளவிற்கு அல்லாஹுதஆலாவை திக்ரு செய்துவருவதாகும்" என்று ஹள்ரத் அவர்கள் பதிலளித்தார்கள்.

நமது நக்ஷ்பந்தியா தரீகாவின் தொடரில் வருகின்ற ஒரு பெரியாரிடம் ஒருவர் வந்து, ஹள்ரத் அவர்களே! மனிதன் எப்பொழுது வாலிப வயதை அடைகிறான்? எனக் கேட்டார். அதற்கு அப்பெரியார், "ஷரீஅத் கூறும் வாலிப வயதைப் பற்றி கேட்கிறீர்களா? அல்லது தரீகத் கூறும் வாலிப வயதைப் பற்றி

கேட்கிறீர்களா?" என்று கேட்டார்கள். அம்மனிதர், ஹள்ரத் அவர்களே! இரண்டைப் பற்றியும் கூறிவிடுங்கள்! எனக் கேட்டுக் கொண்டார். சில விஷயங்களை தெளிவாக கூறினால் தான் விளங்கும் என்பதினால், அப்பெரியார் விஷயத்தை தெளிவாக கூறலானார்கள். எப்பொழுது மனிதனின் உடலிலிருந்து விந்து வெளியாகுமோ அப்பொழுது அவன் ஷரீஅத் பார்வையில் வாலிபமடைகிறான். அதே மனிதன் எப்பொழுது விந்திலிருந்து வெளியாகுவானோ அப்பொழுது அவன் தரீகத்தின் பார்வையில் வாலிபமடைகிறான். அதாவது இச்சையின் காரணமாக செய்து விடுகின்ற அனைத்து பாவங்களை விட்டும் மனிதன் தப்பித்துக் கொள்ளும் போது தரீகத்தின் பார்வையில் வாலிப வயதை அடைகிறான். எனவே, நாம் தரீகத்துடைய பார்வையில் இன்னமும் குழந்தைகளாகவே இருக்கிறோம். ஏனெனில், பாவங்கள் நம்மை விட்டு இன்னும் அகன்றபாடில்லையே! நாம் அடியோடு பாவங்களை விட்டு விலகியிருப்பதின் உறுதியோடு அதற்காக முயற்சி செய்து அல்லாஹ்விடமும் அதற்காக துஆ செய்யும் நேரம் எப்பொழுது வரும்? பாருங்கள்! நாம் வீட்டில் தனிமையில் இருந்தபடி துஆ செய்தால் அது ஏற்றுக் கொள்ளப்பட்டதா? இல்லையா? என்பது தெரியாது. ஏனெனில் நாம் மட்டும் தனியாக இருப்பதால் நம்மை கவனித்து அந்த சந்தேகம் வருகிறது. ஆனால் இது போன்ற சபைகளில் அல்லாஹ்வின் நெருக்கம் பெற்ற எத்தனையோ நல்லடியார்களும், ஷைகுமார்களும் இருக்கின்ற காரணத்தால், நமது தவ்பாவும், துஆவும் ஏற்றுக் கொள்ளப்பட அதிக வாய்ப்புகள் இருக்கின்றன. எனவே, இதே சபையில் நம்முடைய பாவங்களுக்கு தவ்பா செய்ய வேண்டும். இனி அந்த பாவங்களின் பக்கம் செல்லவே மாட்டேன். பரிசுத்தமான வாழ்க்கையை மேற்கொள்வேன் என உறுதி கொள்ள வேண்டும். யா அல்லாஹ்! நாங்கள் தவ்பாவின் மீது நிலைத்திருக்க தவ்ஃபீக் செய்வாயாக! என துஆ செய்ய வேண்டும்.





**விலாயத்தின் ஒளி கிடைக்காமல் போவதேன்?**

பொதுவாக மனிதர்கள், தீனுடைய பல காரியங்களில் தங்களை ஈடுபடுத்தி வருகின்றனர். சிலர் திக்ர் செய்வதிலும், சிலர் தஃவத் - தப்லீக் உடைய பணியிலும் இன்னும் சிலர் தீனுடைய மதரஸாக்களை நடத்துவதிலும் ஈடுபட்டுள்ளனர். இவர்களனைவரும் பெரும்பாலும் பெரும் பாவங்களை விட்டு விலகியே இருக்கின்றனர். ஆனால், ஒரு சில பாவங்களில் இவர்களும் சிக்கிக்கெண்டிருக்கின்றனர். உதாரணமாக சிலர் பார்வையை தாழ்த்த முடியாமல் அவரது பார்வை பார்க்கக் கூடாத இடங்களை பார்த்துக் கொண்டிருக்கும். உண்மையில் அவர் மிக்க மதிக்கத் தக்கவராகவும் வணக்க வழிபாடுகளில் ஆர்வத்துடன் ஈடுபடுபவராகவும் திக்ரு மற்றும் முராகபா - இறைதியானத்தில் நீண்ட நேரம் அமர்பவராகவும் இருப்பார். ஆனால் பார்வையை தாழ்த்துவது அவருக்கு கஷ்டமான காரியமாக இருக்கம்.

இதே போன்று சிலருக்கு நாவை கட்டுப்படுத்துவது சிரமமாக இருக்கும். சில சமயம் நாவிலிருந்து பொய்யும், கெட்ட வார்த்தைகளும் வெளிவந்து விடுகின்றன. ஒரு சில சமயம் மற்றவரின் உள்ளம் புண்படும் விதத்தில் கடுமையாக பேசிவிடுகின்றனர். இன்னும் சிலர் மர்மஸ்தானத்தினால் ஏற்படும் பாவங்களில் அகப்பட்டுள்ளனர். இவர்கள் அனுதினமும் குர்ஆன் ஓதுகிறார்கள். தஸ்பீஹ் செய்கிறார்கள். தஹஜ்ஜுதும் தொழுகிறார்கள். நல்ல மனிதர்களாக இருக்கிறார்கள். மக்களும் அவர்களை நல்ல மனிதர்கள் என மதிக்கிறார்கள். இவையனைத்திற்கு பிறகும் கூட விலாயத் எனும் ஒளி கிடைப்பதில்லை. இதற்கு காரணம், பாவங்கள் நூறு எனில் அதில் தொண்ணூறை விட்டுவிட்டார். ஆனால் பத்து இருக்கிறது. சிலர் தொண்ணூற்றைந்தை விட்டுவிட்டார்கள். மீதி ஐந்து இருக்கிறது. ஒரு சிர் தொண்ணூறாறை விட்டு விலகிவிட்டனர். நான்கு மட்டும் மீதமிருக்கிறது. சிலர் தொண்ணூற்றேழை

மறந்துவிட்டார்கள். மீதி மூன்று பாவங்களை செய்துவருகின்றனர். இப்படியாக ஓரிரு பாவங்களை விட்டு விலகுவது அவர்களுக்கு சிரமமாக தெரிகிறது. இதனால் அவர்கள் பல நற்செயல்கள் செய்தாலும் விலாயத்தின் ஒளி கிடைக்கப் பெறாமல் இருக்கின்றார்கள்.

حسرت ہے اس مسافر مضطر کے حال پر
جو تھک کر رہ گیا ہو منزل کے سامنے

**சேர வேண்டிய இடத்தை கண் கொண்டு பார்த்த பின்னர் சோர்வுற்று திகிலடைந்து தங்கிவிட்டான் ஒரு பிரயாணி. அந்தோ பரிதாபம், என்ன செய்வது!**

பயணத்தின் இலக்கு கண்ணுக்கு முன் தெரிகிறது. இன்னும் ஓரிரு பாவங்களே பாக்கியாக இருந்துவிட்டன. அவைகளையும் உதறித்தள்ளிவிட்டு இரு எட்டுகள் எடுத்து வைத்தால் இலக்கை அடைந்திருப்பார். ஆனால் களைத்து அமர்ந்துவிட்டார். எவ்வளவு பெரிய கைசேதம்!

நாம், நமது தலையில் தொப்பியையும் தலைப்பாகையையும் அணிந்து கொண்டோம். மேலும் முகத்தை சுன்னத்தான தாடியின் மூலம் அலங்கரித்துக் கொண்டோம். நாம் ஏற்படுத்திக் கொண்ட ஷரீஅத் ரீதியான நடை உடை பாவனையின் மூலம் பல பாவங்களை விட்டு நம்மை நாம் தற்காத்துக் கொள்ள முடிந்தாலும், ஒரு சில பாவங்களை இத்தோற்றத்துடன் செய்தே வருகிறோம். அந்த ஒரு சில பாவங்கள் தான் நம்மை தடுத்து விடுகிறது. மனிதன் நூறு சதவிகிதம் பாவங்களை விட்டு தவிர்ந்திருக்கும் போதுதான் அல்லாஹ்வுடன் நெருங்கிய தொடர்பு ஏற்படும்!

**அழுக்கை அகற்றிய பின் அலங்காரி!**

தூசியும், அழுக்கும் படிந்த பொருளை மற்றொன்றுடன் ஒட்டவைக்க முடியாது என்பது எல்லோருக்கும் தெரியும். இதே போன்று பாவக்கறைகள் படிந்த உள்ளத்தையும் அல்லாஹ்வுடன்





இணைக்க முடியாது. சிறு வயதில் நடந்த நிகழ்வு நினைவிற்கு வருகிறது. இரண்டாவது, மூன்றாவது வகுப்பு படித்துக் கொண்டிருந்த பருவம். அப்பொழுது எங்கள் தெரு வழியாக ஒரு மனிதர் "பாத்திரங்களுக்கு முலாம் பூசிக் கொள்ளுங்கள்!, பாத்திரங்களுக்கு முலாம் பூசிக் கொள்ளுங்கள்!" என்று கூவிக்கொண்டே செல்வார். நான் அவரை, "பெரியவரே! சற்று நில்லுங்கள்" என்று கூறிவிட்டு வீட்டில் தாயிடம் சென்று, "தாயவர்களே! பாத்திரங்களை தாருங்கள்! முலாம் பூசலாம்" என்று கேட்பேன். சில சமயம் "இப்பொழுது தேவையில்லை. எல்லா பாத்திரங்களும் தூய்மையாக இருக்கின்றன" எனக் கூறி மறுத்துவிடுவார்கள். உடனே அடியான் அடம்பிடித்து அழ ஆரம்பித்துவிடுவேன். ஏனெனில் முலாம் பூசும் முறை பார்ப்பதற்கு சுவாரஸ்யமாக இருக்கும். இறுதியாக தாயார் அவர்கள் ஓரிரு பாத்திரங்களை எடுத்து கொடுத்து விடுவார்கள். நாங்கள் அவற்றை எடுத்துச் சென்று, '' அங்கில் (UNCLE)! இவைகளுக்கு முலாம் பூசுங்கள்" என்று கொடுத்து விடுவோம். அவர் பட்டறையை பற்றவைப்பார். நெருப்பில் பாத்திரத்தை காட்டி நன்கு சூடாக்குவார். பின்பு ஒரு வகை இரசாயனப் பொடியை தேய்த்து அப்பாத்திரங்களை சுத்தப் படுத்திய பின்பு, அந்த பாத்திரத்தின் நிறம் கொண்ட வர்ணத்தை மெல்லிய படிவாக காட்டன்-பருத்தித் துணியின் மூலம் முலாம் பூசுவார். பின்பு பாத்திரம் பளிச்சிட ஆரம்பிக்கும் இக்காட்சி உள்ளத்தை ஈர்க்கக் கூடியதாக இருப்பதால் அடியான் அதை பார்த்துக் கொண்டே நிற்பேன்.

ஒரு நாள் அடியான், அவரிடம் ''அங்கில்! பாத்திரங்களுக்கு நேரடியாக ஏன் நீங்கள் முலாம் பூசுவதில்லை'' என்று கேட்டேன். அதற்கவர் ''நீங்கள் எடுத்துவரும் பாத்திரங்கள் பார்ப்பதற்கு சுத்தமாக தெரிந்தாலும் எண்ணெய் பிசுபிசுப்பும், அழுக்கும் படிந்து இருக்கின்றன. நீங்கள் சிறு பிள்ளைகளாக இருப்பதால்

அது உங்களுக்கு தெரியாது, அந்த அழுக்கு பிசுபிசுப்பின் மீது முலாம் பூசினால் வர்ணம் பாத்திரத்தில் ஒட்டாது. இதனால் பாத்திரத்தை முதலில் நெருப்பில் சூடாக்கி இராசயணப் பொடியின் மூலம் பாத்திரத்தில் ஒட்டியுள்ள எண்ணெய் பிசுபிசுப்புகளையும் அழுக்கு கறைகளையும் முதலில் நீக்கிவிடுவேன், பின்பு சிறிது வர்ண முலாம் பூசினாலும் பாத்திரம் பளிச்சிட ஆரம்பித்துவிடும்'' என்று கூறினார்.

அச்சிறு பிராயத்தில் அந்த செயல் முறையின் தாத்பரியத்தை புரிந்து கொள்ளவில்லை. இன்று அதை நினைவு கூறும் போது ''பாவங்களின் காரணத்தினால் கறைபடிந்த உள்ளத்தை அல்லாஹ்வோடு இணைக்க முடியாது. முதலில் உள்ளத்தில் உறைந்து போன பாவக்கறைகளை நீக்க வேண்டும். பின்பு தான் அந்த உள்ளம் அல்லாஹ்வோடு இணையும்'' என்ற தாத்பரியம் விளங்குகிறது.

## பாவக்கறைகள் நீங்காத வரை.....

1976-ல் நடந்த நிகழ்வொன்று நினைவுக்கு வருகிறது. ''மிஸ்கீன் பூர்'' என்ற ஊரிலுள்ள கான்காஹ்வில் நான்கு நாட்கள் தங்கும் பாக்கியம் இந்த எளியவனுக்கு கிடைத்தது. இப்பொழுது அங்கு மஸ்ஜித் இருக்குமிடத்தில் அப்பொழுது மஸ்ஜித் இல்லை. சில அறைகள் கொண்ட ஒரு கட்டிடம் இருந்தது. அதற்கருகில் சுமார் ஐந்தாறு அடி உயரமுள்ள சுவரில் குழாய்கள் பொறுத்தப்பட்டிருந்தன. அதில் மத்ரஸா மாணவர்கள் குளிப்பார்கள். அப்படி குளித்துக் கொண்டிருக்கும் போது சில மாணவர்கள், சுவருக்கு அந்த புறம் செல்பவர்கள் மீது தண்ணீரை ஊற்றிவிடுவார்கள். அதனால் கடந்து செல்பவர்கள் சஞ்சலம் அடைவார்கள். அல்லது சில சமயம் சுவருக்கு அந்த புறம் செல்பவர்கள் குளித்துக் கொண்டிருப்பவர்கள் மீது கற்களை விசுவார்கள். அதனால் குளித்துக் கொண்டிருப்பவர்கள் சஞ்சலமடைந்துக் கொண்டிருந்தார்கள். சில மாணவர்கள், ஒரு





ஆசிரியரிடம் சென்று கலந்தாலோசித்து, அந்த சுவரை சற்று உயரமாக்கி விடலாம் என்று முடிவெடுத்து, அதற்கு ஒரு மூட்டை சிமெண்டு மற்றும் செங்கற்களையும், மணலையும் கொண்டு வந்து வெள்ளிக்கிழமையன்று மாணவர்களே அச்சுவரீ மேலும் இரண்டடி உயரத்தி கட்டிவிட்டார்கள். சுவர் உயரமாகிவிட்டதை பார்த்து குளிப்பவர்களும் மகிழ்ச்சியடைந்தனர். சுவரை ஒட்டிச் செல்பவர்களும் மகிழ்ச்சியடைந்தனர். ஒரு மாணவர், அச்சுவர் எவ்வளவு பலமாக இருக்கிறது என்பதை பார்ப்பதற்கு மேல்பகுதியைத் தொட்டார். அது தனியாக ஆடியது. அதை அவர் மற்றவர்களிடம் கூறினார். மற்றவர்களும் வந்து பார்த்ததில், புதிதாக கட்டப்பட்ட மேல் சுவரின் செங்கற்கள் ஒன்றோடொன்று இணைந்து விட்டிருந்தாலும், கீழுள்ள பழைய சுவரோடு சேரவில்லை. கீழுள்ள சுவர் தனியாக நிற்கிறது என்பதை உணர்ந்தார்கள். அதற்குள் ஒருவர் மேல் சுவரை சற்று வேகமாக தொட்டார். அது அப்படியே கீழே விழுந்து நொறுங்கிவிட்டது. சிமெண்டும் செங்கற்களும் வீணாகிவிட்டன. நமது நோக்கமும் நிறைவேறவில்லையே என்றெண்ணி மாணவர்கள் கை சேதமடைந்தனர். அப்பொழுது ஒரு ஆசிரியர் இந்த எளியவனைப் பற்றி ''கட்டிடக் கலை கற்ற இஞ்ஜினியர் என்றும் அவரிடம் சென்று இது சம்பந்தமாக கேளுங்கள்! என்றும் மாணவர்களிடம் கூறியுள்ளார்கள். அங்கிருந்து ஒரு மாணவர் வந்து நாங்கள் புதிதாக கட்டிய மேல் சுவர் அப்படியே விழுந்துவிட்டது. காரணம் புரியவில்லை. தாங்கள் தயவுசெய்து நேரில் பார்த்து ஆலோசனை வழங்குங்கள் என்று கேட்டுக் கொண்டார். அடியான் சென்று பார்த்த போது "கீழே உள்ள பழைய சுவர் சுண்ணாம்பும் மணலும் கலந்த காரையால் கட்டப்பட்டிருந்தது. அதன் மேல் பகுதியிலும் சுண்ணாம்பும் மணலும் மிகுதியாக படிந்திருந்தன. அந்த மணலையும் சுண்ணாம்பையும் பெயர்த்தெடுக்காமல், அதன் மீதே தண்ணீரை ஊற்றி கலவை போட்டு சுவர்

எழுப்பிவிட்டார்கள். நடுவிலிருந்த சுண்ணாம்பு காரை, புதிய சுவரை பழைய சுவரோடு இணையவிடவில்லை. இதனை பார்த்ததும் இரும்பு புருசை (**Steel Brush**) கொண்டு வரச் சொல்லி அதன் மூலம் பழையசுவரின் மேலுள்ள செங்கற்கள் மீது படிந்திருந்த சுண்ணாம்பு காரைகளை சுரண்ட சொன்னேன். இரு மாணவர்கள் சுரண்டி சுத்தப்படுத்தி விட்டார்கள். பின்பு அவர்கள் மூலமாகவே சிமெண்டு கலவை போடவைத்து செங்கற்களை அடுக்கி சுவரை உயர்த்தி கட்ட வைத்தேன். இப்பொழுது புதிய சுவர் பழைய சுவரோடு நன்கு இணைந்து கொண்டது. மாணவர்கள் மகிழ்ச்சியடைந்ததோடு ஆச்சரியப்பட்டார்கள். அவர்களின் ஆசிரியர்களில் ஒருவர் அடியானிடம் வந்து, “நாங்கள் கட்டிய சுவர் தனியாக பெயர்ந்து விழுந்துவிட்டது. ஆனால் நீங்கள் கட்டிய சுவர் மட்டும் எப்படி உறுதியாக இணைந்து கொண்டது” என்று கேட்டார்கள். பழைய சுவரின் மீதிருந்த சுண்ணாம்பு காரை புதிய சுவரை இணையவிடாமல் தடுத்துக்கொண்டிருந்தது. அதை சுத்தப்படுத்திய பின்பு புதிய சுவர் எழுப்பியதால் உறுதியாக இணைந்துவிட்டது என்று அடியான் கூறினேன்.

அன்று நடந்த அந்த நிகழ்வு இன்று நினைவிற்கு வரும் போது “அடியான், தன் உள்ளத்தை அல்லாஹ்வோடு இணைக்க நாடுகிறான். ஆனால், அந்த உள்ளத்தின் மேல் படிந்திருக்கும் பாவக்கறைகள் இணையவிடுவதில்லை'' என்ற விஷயம் விளங்குகிறது. இதனால்தான் நம்முடைய பெரியார்கள், சீர்திருத்தத்தை நாடி வருகின்ற ஒவ்வொருவருக்கும் பாவங்களை விட்டு விலகி வாழ்வதற்கான பயிற்சியளிப்பதோடு ''பாவங்களை விட்டு விட்டால் சிறிய முயற்சியின் மூலமே அல்லாஹ்வோடு தொடர்பு ஏற்பட்டுவிடும். ஏனெனில் அல்லாஹ் பரிசுத்தமானவனாக இருக்கிறான். எனவே பாவமெனும் அசுத்தம் இடையில் இருந்தால் தொடர்பு ஏற்படவே முடியாது'' என்று கூறுவார்கள்.





## பாவமும் ஒரு விதமான அசுத்தம் தான்.

ஷரீஅத்தில் அசுத்தங்கள் இரு வகையாக பிரிக்கப்படுகின்றன. முதலாவது, நஜாஸதே ஹகீகீ எனும் பார்வைகளில் தென்படும் அசுத்தம். உதாரணமாக சிறுநீர், மலம், சாணம் போன்றவைகள் இதில் அடங்கும். இவைகளை அசுத்தங்கள் என்று சாதாரணமாக நம்மால் உணர்ந்து கொள்ள முடிகின்ற காரணத்தால் இவைகளை அசுத்தங்கள் என்று அனைவரும் கூறிவிடுவார்கள்.

ஆனால் இரண்டாவது வகை அசுத்தம் நஜாஸதே ஹுக்மி எனும் பார்வைகளில் தென்படாத அசுத்தம். அதாவது இதை அசுத்தம் என்று நம்மால் உணர்ந்து கொள்ள முடியாது. இறைவன் அதை நஜிஸ் (அசுத்தம்) என்று கூறியதால் நாமும் அதை அசுத்தம் என்று ஏற்றுக் கொள்வோம். உதாரணமாக ஒரு பெண், மாதவிடாய் காலத்தில் அசுத்தத்தை கழுவி, குளித்து சுத்தமாகி நறுமணம் பூசிக் கொண்டாலும், அவள் மஸ்ஜிதிற்குள் வரக்கூடாது. குர்ஆனை தொடக்கூடாது. ஓதவும் கூடாது. தொழக் கூடாது. ஏனெனில் இறைவன் இவைகளை செய்யக் கூடாது என்று கட்டளையிட்டுள்ளான். ஆக அந்த நாட்களில் பெண்கள் குளித்து சுத்தமாக இருந்தாலும் உள்ரங்கத்தில் அசுத்தமாக இருப்பதாகவே கருதப்படும்.

இதே போன்று ஒரு முஷ்ரிக் (இணை வைப்பவன்) எழுபது முறை கடலில் குளித்தாலும் அவன் அசுத்தமானவனாகவே இருப்பான். ஏனெனில் அல்லாஹுதஆலா தன் திருமறையில்

إِنَّمَا الْمُشْرِكُونَ نَجَسٌ

இணைவைப்போர்களெல்லாம் அசுத்தமானவர்களே. (அல்குர்ஆன் (9:28) என்று கூறியுள்ளான். ஆதலால் இவர்கள் நஜாஸதே ஹுக்மி எனும் உள்ரங்கத்தில் அசுத்தமானவர்களாகவே இருக்கிறார்கள்.

ஆக சங்கைக்குரியவர்களே! பாவம் என்பது நஜாஸதே ஹுக்மி எனும் பார்வைகளில் தென்படாத அசுத்தமாக இருக்கிறது. நமக்கு அதன் அசிங்கம் தெரிவதில்லை.

எந்த உறுப்பு பாவம் செய்கிறதோ அந்த உறுப்பு அல்லாஹ்வின் பார்வையில் அசுத்தமடைந்துவிடுகிறது. கரத்தால் பாவம் ஏற்பட்டால் கரம் அசுத்தமடைந்து விடுகிறது. வாயின் மூலம் பாவம் செய்தால் வாய் அசுத்தமடைந்து விடுகிறது. இப்பொழுது இவைகளை சுத்தப்படுத்தியாக வேண்டும். எப்படி சுத்தப் படுத்துவது? "எந்த அடியான் முறையாக ஒளு செய்கிறானோ அவன் தன் உறுப்புகளை கழுவும் போது அவ்வுறுப்புகளிலிருந்து பாவ அழுக்குகள் வெளியேறி விடுகின்றன" என்று நபி ﷺ அவர்கள் கூறினார்கள்.

நம்முடைய பெரியார்கள் இந்த விஷயத்தில் மிகவும் பேணிக்கையாக இருந்துள்ளார்கள். வீட்டில் ஒளுச் செய்துவிட்டு மஸ்ஜிதிற்கு செல்லும் வழியில் எதிர்பாராமல் அந்நியப் பெண் மீது பார்வை பட்டுவிட்டால் மீண்டும் ஒளுச் செய்து கொள்வார்கள். மேலும் "கண் அசுத்தமாகிவிட்டது. அசுத்தமான கண்ணுடன் எப்படி முஸல்லா-தொழுகைவிரிப்பில் நிற்பது?" என்று கூறுவார்கள்.

நாம் நமது நிலையை சற்று சிந்தித்துப்பார்த்தால் நம்முடைய உறுப்புக்களனைத்தும் நஜிஸாக (அசுத்தமாக) இருப்பது தெரியவரும். இந்த அசுத்தமான உடலுடன் அல்லாஹ்வோடு எப்படி தொடர்பை ஏற்படுத்த முடியும்? எனவே முதலில் பாவமெனும் அழுக்கை சுத்தப்படுத்த வேண்டும். பார்வைகளில் தென்படாத பாவமெனும் அசுத்தத்தை சுத்தப்படுத்துவதற்கு தவ்பா எனப்படும்.

## எது வரை அசுத்தத்திலேயே வாழ்ந்து கொண்டிருப்பது?

ஒரு மனிதன் மனம் உருகி தவ்பா செய்துவிட்டால் அந்த தவ்பா, அவர் செய்த பாவங்களை அழித்துவிடுகிறது. ஒரு ஹதீஸில் اَلتَّائِبُ مِنَ الذَّنْبِ كَمَنْ لَا ذَنْبَ لَهُ





''ஒருவர் தான் செய்த பாவங்களுக்கு தவ்பா செய்துவிட்டால் பாவங்களே செய்யாதவரைப் போல் ஆகிவிடுகிறார்'' என்று வந்துள்ளது.

உடலுறுப்புகளில் படிந்துள்ள அழுக்கு கறைகளை சுத்தப்படுத்துவதற்கு அரபியில் ''தஹாரத்'' என்று கூறுவதைப் போல் உடலுறுப்புகளில் படிந்துள்ள பாவக்கறைகளை சுத்தப்படுத்துவதற்கு ''தவ்பா'' என்று கூறப்படும். இவ்விரு விஷயங்களையும் ஒன்றாக ஒரு வசனத்தில் அல்லாஹு தஆலா குறிப்பிடுகிறான். إِنَّ اللّٰهَ يُحِبُّ التَّوَّابِينَ وَيُحِبُّ الْمُتَطَهِّرِينَ

''நிச்சயமாக அல்லாஹ் தவ்பா செய்பவர்களையும் நேசிக்கிறான்; தூய்மையாக இருப்பவர்களையும் நேசிக்கிறான். -(அல் குர்ஆன் 2:222)

இச்சபைக்கு வந்துள்ளோம்.இப்பொழுதே பாவம் எனும் அசுத்தத்தை விட்டு பரிசுத்தமடைந்துவிட வேண்டும் என்று உறுதியெடுக்க வேண்டும். எது வரை அசுத்தத்திலேயே வாழ்ந்து கொண்டிருப்பது? பாவம் எனும் அசுத்தம் எது வரை நம் உடலில் ஒட்டிக் கொண்டிருக்கும்? நாம் உண்மையான முறையில் தவ்பா செய்து, ''யா அல்லாஹ்! இன்று முதல் நாங்கள் தெரிந்தே வேண்டுமென்று எந்த பாவத்தையும் செய்யமாட்டோம்'' என்று உறுதிமொழி எடுக்கும் அந்த நாள் எப்பொழுது வரும்?

## முயற்சித்துதான் பாருங்களேன்!

நமது பெரியார்கள் ஆச்சரியமான ஒரு விஷயத்தை குறிப்பிட்டுள்ளார்கள். எவர் வேண்டுமென்று பாவம் செய்வதை விட்டுவிடுகிறாரோ அல்லாஹுதஆலாவும் அவர் கேட்கும் துஆக்களை மறுப்பதை விட்டுவிடுகிறான். எனவே ''எங்கள் எஜமானனே! இன்று முதல் தெரிந்தே எந்த பாவத்தையும் செய்யமாட்டோம்'' என்று உறுதியாக நிய்யத் வைக்க வேண்டும். பின்னர் நம்மை அறியாமல் எதிர்பாராத விதமாக ஏதேனும் பாவம்

நிகழ்ந்துவிட்டால் , உடனே பாவமன்னிப்பு கோரி அதற்குரிய பரிகாரம் தேடிக் கொள்ள வேண்டும். என்ன நாம் இவ்வாறு உறுதி கொண்டுவிட்டால் மலக்குகளாக ஆகிவிடுவோமா? இல்லை! மனிதர்களாகவே இருப்போம். ஆம். நமக்குள் ஒரு மாற்றத்தை காண முடியும் பாவங்களை விட்டு முடிந்த வரை விலகியிருக்க முயற்சிப்போம். தப்பித்தவறி பாவம் நிகழ்ந்துவிட்டால், உடனே தவ்பா செய்பவர்களாக மாறிவிடுவோம். பாவத்தில் நீடிக்க மனம் இடமளிக்காது.

## இருபதாண்டுகளாக ஓய்வெடுக்கும் மலக்கு

முஜத்தித் அல்ஃபஸானி என அன்பாக அழைக்கப்படும் மௌலானா ஷைகு அஹ்மது ஸர்ஹிந்தீ (ரஹ்) அவர்கள் எழுதிய கடிதங்கள் ஒன்றில் வியக்கத் தகு ஒரு விஷயம் பதிவாகியுள்ளது. பாவங்களை எழுதும் மலக்குமார்களுக்கு இருபதாண்டுகளாகியும் ஒரு முறை கூட பாவத்தை பதிவு செய்யும் சந்தர்பமளிக்காமல் வாழ்ந்து சென்ற பல பரிசுத்தமான அடியார்களும் இந்த உம்மத்தில் இருந்துள்ளார்கள் என்று எழுதியுள்ளார்கள். சுப்ஹானல்லாஹ்! சுப்ஹானல்லாஹ்! இது எப்படி சாத்தியமானது? வேண்டுமென்றே பாவம் செய்யாவிட்டாலும் மனிதன் என்ற அடிப்படையில் அறியாமல் பாவம் நிகழ்ந்திருக்கலாமே! என்றால், தப்பித்தவறி இவர்கள் மூலம் ஏதேனும் ஒரு பாவம் நிகழ்ந்துவிட்டால் உடனே தவ்பா செய்து அழுது புலம்பி மன்றாடி அல்லாஹ்வை திருப்தியடைய செய்யும் வரை அவர்கள் நிம்மதியடைய மாட்டார்கள். இதனால் அப்பாவம் பதிவு செய்யப்படாமலேயே போய்விடும். காரணம் என்னவெனில், பாவத்தை எழுதும் மலக்கு பாவத்தை உடனே எழுதுவதில்லை. மாறாக இந்த அடியான் அல்லாஹ்விடம் தவ்பா செய்து கொள்ளட்டும் என்று சுமார் மூன்று மணி நேரம் வரை காத்திருக்கிறார் என்று ஒரு ஹதீஸில் வருகிறது. நாமும் இவ்வாறு செய்து வந்தால் இன்ஷா அல்லாஹ் நாமும் அப்புனிதர்களின் பட்டியலில் இடம் பெற முடியும். அல்லாஹ் தவ்ஃபீக் செய்வானாக! ஆமீன்.





## குர்ஆன் மூலமே பேசிவந்த பெண்மணி

ஹஜ்ரத் அப்துல்லாஹ் இப்னு முபாரக் (ரஹ்) அவர்கள் "திருக் குர்ஆனில் இடம் பெற்றுள்ள வாசகங்கள் மூலம் பேசிவந்த ஒரு பெண்மணி பற்றி எழுதியுள்ளார்கள். அப்பெண்மணியின் குமாரர், என்னிடம் வந்து "எங்கள் தாயாரின் நாவிலிருந்து கடந்த இருபதாண்டுகளாக திருக் குர்ஆனின் வார்த்தைகளைத் தவிர வேறெந்த வார்த்தைகளும் வெளிவருவதில்லை. எதை பேசினாலும், எதற்கு பதிலளித்தாலும் திருக் குர்ஆனின் வாசகத்தின் மூலமே பேசிமுடித்து விடுவார்கள்'' என்று கூறினார்கள். நாளை கியாமத் நாளன்று இப்படிப்பட்ட பெண்களும் அல்லாஹ்விற்கு முன்னால் நிறுத்தப்படுவார்கள். நாமும் நிற்போம். அப்பொழுது நம் நிலை என்னவாகும்?

இன்னாரை இழிவானவன் என்றும், இன்னாரை கேவலமானவன் என்றும் இன்னாரைப் பற்றி தீனுடைய வாடையே இல்லாதவர் என்றும் ஏன் கூறினாய் என்று கேட்கப்பட்டால் நாம் என்ன பதில் கூற முடியும்? அல்லாஹு அக்பர் கபீரா! இப்பாவங்களை விட்டு விலகி அல்லாஹுத ஆலாவிடம் உண்மையான முறையில் தவ்பா செய்து கொள்வதற்கு இன்று நேரம் இருக்கிறது. இந்த அரிய சந்தர்பத்தை பயன்படுத்திக் கொள்வோமாக!

## மூன்று காரியங்களுக்கு விசேஷ உதவி

நம்முடைய பெரியார்கள் அழகானதொரு கருத்தை கூறியுள்ளார்கள். மூன்று காரியங்களை மனிதன் செய்ய முற்படும் போது அல்லாஹு தஆலாவின் விசேஷ உதவி அவனை வந்தடைகின்றன.

முதலாவது, நல்லெண்ணத்துடன் இறையில்லம்-மஸ்ஜிதை கட்ட முயற்சிக்கும் போது அல்லாஹ்வின் பிரத்தியேக உதவிகள் வரத்துவங்கிவிடுகின்றன. வெளிரங்கத்தில் எந்த ஏற்பாடுகளும் இருக்காது. அல்லாஹ் சுப்ஹானஹுவதஆலா

எல்லா ஏற்பாட்டையும் செய்துவிடுவான். குக்கிராமங்களில் அமைந்துள்ள மஸ்ஜிதுகளை நீங்கள் பார்ததில்லையா! அவைகளை நிர்மாணிக்கும் நிதி வசதி அந்த குக்கிராமங்களில் எங்கு இருக்கிறது. அல்லாஹ்வின் நல்லடியார் ஒருவர் , மஸ்ஜிதை நிர்மாணிக்க வேண்டுமென ஆசைப்பட்டார். கிருபையுள்ள ரப்பு அதனை ஏற்றுக் கொண்டு எல்லா வித மான தேவைகளையும் நிறைவேற்றிக் கொடுத்தான். இன்று அல்ஹம்துலில்லாஹ் அம்மஸ்ஜிதுகளின் கம்பீரமான தோற்றத்தை பார்த்தால் உள்ளம் குளிர்ந்துவிடுகிறது.

இரண்டாவது விஷயம், ஒரு அடியார் தனது மகளுக்கு திருமணம் முடித்து வைக்கும் நல்லெண்ணத்தோடு ஒரு தேதியை முடிவு செய்கிறார். உண்மையில் அதற்குறிய வசதிவாய்ப்புகள் அவரிடம் இருக்கவில்லை. என்றாலும் குறித்த நேரத்தில் அல்லாஹுதஆலா எல்லா விதமான ஏற்பாடுகளையும் செய்து முடித்து எந்த பிரச்சனைகளுமின்றி கண்ணியமாக அம்மணப்பெண்ணை கணவன் வீட்டிற்கு அனுப்பி வைக்கிறான்.

மூன்றாவது விஷயம், எந்த அடியான் பாவங்களை விட்டுவிலகி வாழ நினைத்து உண்மையான முறையில் தவ்பா செய்வதின் உறுதி கொண்டுவிட்டால், அல்லாஹுதஆலா அந்த அடியானுக்கு விசேஷ உதவிகள் செய்கிறான்.

நமது எண்ணங்கள் தான் உறுதியாக இருப்பதில்லை. பாவங்களனைத்தையும் அடியோடு விட்டுவிட வேண்டும் என்ற அசைக்க முடியாத அளவிற்கு உறுதி கொண்டுவிட்டால், நிச்சயமாக அல்லாஹ் நூறு சதவீதம் பாவங்களில் ஈடுபடாமல் நம்மை பாதுகாப்பான். இது அவனுக்கு லேசான காரியமாகும். நாம் அந்த கிருபையுள்ள ரப்பின் மீதே நம்பிக்கை வைத்துள்ளோம்.

وَلَوْلَا فَضْلُ اللّٰهِ عَلَيْكُمْ وَرَحْمَتُهٗ مَا زَكٰى مِنْكُمْ مِّنْ اَحَدٍ اَبَدًا
وَّلٰكِنَّ اللّٰهَ يُزَكِّيْ مَنْ يَّشَآءُ





அல்லாஹ்வின் கருணையும், அவனுடைய ரஹ்மத்தும் உங்கள் மீது இல்லையானால்,உங்களில் எவரும் ஒருகாலமும் பரிசுத்தமாக முடியாது - எனினும், அல்லாஹ் தான் நாடியவர்களை பரிசுத்தப்படுத்துகிறான். (அல்குர்ஆன் 24:21)

எனவே நம்முடைய அனைத்து காரியங்களும் அல்லாஹுதஆலாவின் ஓர் அருள் பார்வையில் அடங்கியுள்ளன. இல்லை,இல்லை, உண்மையை சொல்வதாக இருந்தால், அல்லாஹு தஆலாவின் அருள் பார்வை ஜாடைமாடையாக நம்மீது பட்டுவிட்டாலும் நம்முடைய அனைத்து அலுவல்களும் சீராகிவிடும். ஒரு அருள் பார்வை பட்டால் போதும் நமது முழுவாழ்க்கை சுபிட்சமாக மாறிவிடும். . நமது உள்ளக்கிடக்கை மாற்றிவிடும். உள்ளத்தை நன்மைகளால் நிரப்பிவிடும்.

يُقَلِّبُهَا كَيْفَ يَشَاءُ

உள்ளத்தை தான் நாடியவாறு அல்லாஹ் மாற்றியமைக்கிறான். எனவே யா அல்லாஹ்! எங்கள் இதயங்களை நன்மையின் பக்கம் திருப்பிவிடுவாயாக! என்று துஆ கேட்க வேண்டும்.

## இறைநேசர்களின் இருப்பிடம்

இன்று இரவு நீங்கள் தங்கவிருக்கும் இந்த இடம் இறைநேசர்கள் தங்குமிடமாகும். முஜத்தித் அல்ஃபஸானி (ரஹ்) அவர்கள் தங்கள் கடிதப் பேழையில் ''இறைநேசர்கள் தங்குமிடங்களில் துஆக்கள் அங்கீகரிக்கப்படுகின்றன. எனவே அங்கு அதிகமாக துஆச் செய்ய வேண்டும்'' என்று எழுதியுள்ளார்கள். இறைநேசர்கள் பரக்கத்தால் அல்லாஹ்வின் அருள் அபரிமிதமாக பொழிகின்றது. அல்லாஹ் மிகப் பெரிய அருளாளன். இன்று இரவு பாவமன்னிப்பு கேட்கும் இரவாகும். கூட்டம் முடிந்த பின் இரவில் எழுந்து, தவ்பா நஃபில் தொழுது தவ்பா செய்து அல்லாஹுதஆலாவிடம், இனி எந்த பாவத்தையும் செய்யமாட்டேன் என்று உறுதியாக ஒப்பந்தம் எடுத்துக் கொள்ள வேண்டும். பின்னர் பாவங்களை விட்டு விலகியிருப்பதை

அல்லாஹ் எவ்வளவு இலகுவாக்கிவிடுகிறான் என்பதை கண்கூடாக காண்பீர்கள். பாவங்களை விட்டு தவிர்ந்திருப்பது நமக்கு சிரமமான காரியமாகும். ஆனால் பாவங்களை விட்டு நம்மை பாதுகாப்பது அல்லாஹ்வுக்கு சுலபமான காரியமாகும். எனவே நாம் உறுதி கொண்டால், அல்லாஹ் உதவி செய்வான்.

நமது நக்ஷ்பந்தியா ஸில்ஸிலாவில் காஜா உபைதுல்லாஹ் அஹ்ரார் (ரஹ்) என்ற ஒரு பெரிய இறைநேசர் இருந்தார்கள். அவர்கள் தம் சீடர்களிடம் அடிக்கடி "பைஅத் வழங்குவது என் நோக்கமல்ல. மாறாக நபி ﷺ அவர்களின் சுன்னத்தான வழிமுறைகளை நடைமுறை படுத்துவதே என் நோக்கம்" என்று கூறுவார்கள். இவர்கள் அபூர்வமான ஒரு விஷயத்தை கூறியுள்ளார்கள். அதனை படித்து உள்ளமெல்லாம் குளிர்ந்துவிட்டது. ஒரு மனிதர் எந்த பாவங்களையும் செய்யாமல் ஒரு நாளை கழித்துவிட்டால், அவர் அந்த நாளை நபி ﷺ அவர்களின் சகவாசத்தில் கழித்ததைப் போன்றாகும் என்று கூறினார்கள். எனவே "எனது ரப்பே! என் எஜமானனே! என் வாழ்நாட்களில் ஒரு நாளையாவது இப்படி பாவமின்றி கழிய தவ்ஃபீக் செய்வாயாக!" என அல்லாஹ்விடம் மன்றாடி கேட்க வேண்டும். அனுதினமும் காலை எழுந்தவுடன் நிய்யத் வைக்க வேண்டும். யா அல்லாஹ்! இன்றைய தினம் உன்னுடைய எந்த கட்டளைக்கும் நான் மாறு செய்யாமலிருக்க தவ்ஃபீக் செய்வாயாக என்று உருக்கமாக துஆ கேட்பதுடன் முயற்சி செய்தால் அல்லாஹ் ரப்புல் ஆலமீன் இலகுவாக்கிவிடுவான். இரக்கம் காட்டுவான்.

## வருத்தப்பட்டு வருகின்ற கண்ணீர்த்துளி

ஒரு அடியான், தான் செய்த தவறுகளை எண்ணி மனம் வருந்தி அழுகின்ற போது வருகின்ற கண்ணீர்த்துளி, மிகப் பெரிய காரியத்தை அது சாதித்து விடுகிறது. இதனை கூறிவிட்டு சொற்பொழிவை நிறைவு செய்கிறேன். நீங்கள் உங்கள் நண்பனின் வீட்டு வாசலில் நின்று கொண்டு சப்தமிட்டு





அழைத்தாலே சிலசமயம் கதவை திறந்து உங்களை வரவேற்பார். ஒரு சிலசமயம் கதவை தட்டியபின்னரே கதவை திறப்பார். இதே போன்று அடியான், தான் செய்த பாவங்களை எண்ணி வருத்தப்பட்டு அழும் போது கண்களிலிருந்து வருகின்ற கண்ணீர்த் துளி கன்னத்தின் மீதோ அல்லது பூமியின் மீதோ சப்தமின்றி விழுந்தாலும், அது அல்லாஹ்வின் ரஹ்மத்துடைய கதவின் மீது தட்டும் சப்தத்தை எழுப்புகின்றது. ரஹ்மத்தின் கதவை தட்டுகிறது. இதை ஒரு உருது கவிஞர் இசைத்து காட்டுகிறார்கள்.

میں نے پلکوں سے تیرے یار پے دستک دی ہے

میں وہ سائل ہوں جسے کوئی صدا یاد نہیں

آؤ ایک سجدہ کریں عالم مدہوشی میں

کون کہتا ہے کہ عاشق کو خدا یاد نہیں

உன் அன்பென்னும் கதவை என் கண்ணிமைகள் மூலம் தட்டுகிறேன்.

சப்தமிட்டு அழைக்கத் தெரியாத யாசகன் நான் . வாருங்கள்!

மெய்மறந்த இவ்வேளையில் ஒரு ஸஜ்தா செய்து கொள்ளலாம்.

நேசனுக்கு இறைவனின் நினைவு இருப்பதில்லையென்று யார் சொன்னது!

கரங்களால் கதவை தட்டுவதைப் போல் பாவங்களை எண்ணி வருத்தப்பட்டு அழுகின்ற போது கண்ணிமைகள் மூலம் அல்லாஹ்வின் கதவை தட்டுகிறோம். ஆனால் அதை நாம் உணர்வதில்லை.

## என் எஜமானனே! என்னை உன் நேசனாக்கிக் கொள்வாயாக!

நாங்கள் பாவிகளாக இருக்கிறோம். பாவங்களில் மூழ்கிக் கிடக்கிறோம். இருப்பினும் யா அல்லாஹ்! உன் நேசர்களாக விரும்புகிறோம். நாங்கள் எங்கள் நஃப்ஸிடமும் கெட்ட ஷைத்தானிடமும் சிக்கி தவிக்கிறோம்.

யா அல்லாஹ்! பலகீனர்கள், பலமானவர்களின் உதவியை

நாடுவார்கள். யா அல்லாஹ்! நாங்கள் பலகீனமானவர்கள், நீ பலமானவனாக இருக்கிறாய் . எனவே நாங்கள் என் உதவியை தேடுகிறோம். எங்களுக்கு நீ உதவி செய்வாயாக!

உன் உதவியை தேடியே எங்கள் இல்லங்களை விட்டு வெளியேறி இங்கு வந்துள்ளோம். இறை நேசர்கள் குழுமியிருக்கும் கூட்டங்களுக்கு செல்வதின் நோக்கமும் இதுதான். யா அல்லாஹ்! உன்னை திருப்தி படுத்த விரும்புகிறோம். ஆனால் பாவங்கள் செய்து உன்னை அதிருப்தி படுத்திவிட்டோம். இன்று திருப்தி படுத்த முடிவெடுத்துவிட்டோம். கிருபையுள்ள ரப்பே! ஏற்றுக் கொள்வாயாக! இன்று முதல் பாவங்களை விட்டு எங்களை காப்பாற்றுவாயாக! தவறுகளைவிட்டு தவிர்ந்திருப்பதை லேசாக்குவாயாக! எங்கள் உள்ளத்தை பரிசுத்தப்படுத்துவாயாக! உன்பரிசுத்தமான அடியார்கள் குழுமியிருக்கின்ற இச்சபையை விட்டு செல்லும் போது பரிசுத்தமடைந்தவர்களாக செல்ல தவ்ஃபீக் செய்வாயாக!

وَآخِرُ دَعْوَانَا أَنِ الْحَمْدُ لِلّٰهِ رَبِّ الْعَالَمِيْنَ

யா அல்லாஹ்! உன் விருப்பத்திற்கேற்ப பரிசுத்தமான வாழ்க்கையை மேற்கொள்ள தவ்ஃபீக் செய்வாயாக! ஆமீன்.

لب پہ ذکر اللہ کی تکرار ہو
دل میں ہر دم حق کا استحضار ہو
اس پر تو کر لے اگر حاصل دوام
پھر تو بس کچھ دن میں بیڑا پار ہو

அல்லாஹ்வின் திக்ரில் நாவு திளைத்திருக்கட்டும்!
இதயத்தில் இறைவனின் நினைவு இருந்து கொண்டே இருக்கட்டும்!
இந்நிலையில் நீ நீடித்திருந்தால், சில தினங்களில்
உன் படகு அக்கரையை சென்றடைந்துவிடும்.

## ஹள்ரத் பீர் ஸாஹிப் அவர்களின் சீரிய உரைகளில் எமது வெளியீடுகள்

1. بدنظری کے نقصانات (اردو)

(தமிழில், ٹمل)

2. அந்நிய பெண்களை பார்ப்பதினால் ஏற்படும் விபரீதங்கள்

(ஆங்கிலத்தில், انگریزی

3. SIN OF THE EYE

(இச்சிறு நூல் தெலுங்கு மொழியிலும் கிடைக்கும்)

4. معمولات یومیہ (نقشبندیہ)

(தமிழில்,ٹمل)

5. அன்றாட அமல்கள் (நக்ஷ்பந்தீ)

6. گناہوں کے نقصانات (ٹمل)
பாவத்தின் பாதிப்புகள்

7. رب غفار کا گنہ گاروں سے پیار (ٹمل)
பாவிகளை மன்னிக்கும் பாசமான அல்லாஹ்

8. گناہ سے کیسے بچیں؟ (ٹمل)
பாவத்தை விட்டு பாதுகாத்து கொள்வது எப்படி?

Publisher
MUFTI SHAKEEL AHMED NAQSHBANDI
VELLORE - 632004, Tamil Nadu, India.
Cell : +91 - 94444 53232
E-mail : shakeel.naqshbandi@yahoo.com